கடலோரம் எழுந்தவை ஏழு கோயில்கள்.
அதில் கடல் விழுங்கிவிட்டதாகக்
கூறப்படுபவை ஆறு கோயில்கள்.
எஞ்சியது ஓர் ஆலயம், அது நம் பாக்கியம்

வசீகரிக்கும் மாமல்லபுரம் கடற்கரைக்கோயில் தென்இந்தியாவின் பழம்பெரும் ஆலயங்களுள் ஒன்று. கி.பி. எட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கட்டப்பட்ட இந்த ஆலயம் ஏராளமான பார்வையாளர்களைக் கவர்ந்திழுக்கும் தமிழகத்தின் வரலாற்றுச் சின்னம். இதே மாமல்லபுரம் தான் உன்னதமான சிற்பக்கலைக்குப் பெயர் பெற்றது. இங்கேதான் உலகப் புகழ்பெற்ற வரலாற்றுச் சின்னங்களாக விளங்கும் அர்ஜுனன் தவம் (உலகிலேயே ஒற்றைக் கல்லைக் கொண்டு உருவாக்கப்பட்ட ஓவியச் சிற்பம்), ஐந்து ரதங்கள் மற்றும் குடைவரைக் கோயில்கள் ஆகியவை உள்ளன. சிற்பக் களஞ்சியமாகத் திகழும் வரலாற்றைக் கண்முன்னே நிறுத்தும் மாமல்லபுரத்திற்கு வாருங்கள். சென்னையிலிருந்து 55 கி.மீ. தொலைவில் உள்ளது இந்த வரலாற்று நகரம். வாருங்கள், காணுங்கள், மகிழுங்கள்.

பண்டைய
அதிசயங்களைப்
பார்க்கவில்லையா ?




experience yourself



For details on TTDC's attractive package tours with excellent accommodation and transport facilities, please contact: TTDC, Tamilnadu Tourism Complex, Wallajah Road, Chennai - 600 002. Tamilnadu, India. Ph: 91-044-25388785 / 25361640. Fax: 91-044-25382772. E-mail: ttdc@md3.vsnl.net.in Website: www.tamilnadutourism.org For online bookings: www.ttdconline.com
Call: Chennai 91-044-25389857, 25383333 New Delhi 91-011-23745427 Mumbai 91-022-24110118 Goa 91-0832-2226390 Bangalore 91-080-22286181 Hyderabad 91-040-27667492 Kolkata 91-033-22437432



# அம்புலிமாமா

## சிறப்புப் படைப்பாக மதிமுகம் : 108 செப்டம்பர் : 2004 புன்னகை : 9



மாய மந்திரவாதி

13



நவீன வேதாளக் கதை

19



அயல் நாட்டுக் கதைகள்

42



விஷ்ணு புராணம்

45

## பொருளடக்கம்




SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**

***Remittances in favour of Chandmama India Ltd.***
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail :
subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900 /- இந்தியாவிற்குள் ரூ.144 /- **புக்போஸ்டில்** உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியார்டரிலோ **சந்தமாமா இந்தியா லிமிடெட்** என்ற பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# தவிர்த்திருக்க வேண்டிய துயர நிகழ்ச்சி

மன உறுதி படைத்த ஒரு வீரச்சிறுவன் தனது அரும் முயற்சிகளால் தன் சகோதரியையும் ஒரு குழந்தையையும்அபாயத்திலிருந்து மீட்டு தனது அடுத்த முயற்சியில் தானே உயிரிழந்த பரிதாபக் கதை ஒன்று உண்டு. அவனை அதற்குப் பின் யாரும் காணமுடியவில்லை. குழந்தைகள் தினக் கொண்டாட்டத்தன்று வீரச் செயல்கள் புரிந்தவர்களுக்குப் பரிசுகள் வழங்குகையில் ஒருக்கால் அவன் பெயரை மீண்டும் கேட்கலாம்.

கும்பகோணத்தில் சமீபத்தில் ஒரு பள்ளியில் நடந்த தீ விபத்தில் ஒரு பாவமும் அறியாத அப்பாவிக் குழந்தைகள் சுமார் நூறு பேர் உயிரிழந்தனர். அனைவரும் பத்து பன்னிரண்டு வயதுக்குட்பட்டவர்கள். அங்கிருந்த இருபது ஆசிரியர்களால் அந்தக் குழந்தைகளில் ஒருவரைக் கூட உயிருடன் மீட்க முடியவில்லை. ஒரு குழந்தையின் தாய்க்கும் தந்தைக்கும் பிறகு மிக உயர்ந்த ஸ்தானத்தை வகிப்பவர் ஆசிரியர் ஆவார். தாய், தந்தை, ஆசிரியர் ஆகியோர்கள் தெய்வங்களாகவே கருதப் படுகின்றனர்.

இறைவன் உறையும் ஆலயத்தைப் போல் புனிதமானது பள்ளி. ஆகவே தான் இதை 'வித்யாலயம்' என்று குறிப்பிடுகின்றனர். இத்தகைய பள்ளிகளில் சில குறைந்தபட்ச அடிப்படை வசதிகளாவது இருக்க வேண்டும். இவற்றில் பாதுகாப்பு என்பது மிகவும் முக்கியம்.

பள்ளிகளில் இந்த அடிப்படை வசதிகள் உள்ளனவா என்று கண்காணிப்பது அதிகாரிகளின் மிக முக்கியமான கடமையாகும்.

*ஆசிரியர் :* **விஸ்வம்**





# வாசகர்களுக்கானக் கதைப் போட்டி (ஏப்ரல்)

## தேர்ந்தெடுக்கப் பட்ட சிறந்த கதை




முதல் பயணி நீதிபதியிடம் 'ஐயா! நான் ஒரு ஏழை நாடோடி. வறுமையினால் மிகவும் என் குடும்பத்தினர் வாடி விட்டனர். ஆகையால் இவரது விலை உயர்ந்த வைர மோதிரத்தைக் கவர்ந்து சென்று விற்று என் வறுமையைப் போக்கிக் கொள்ள நினைத்தேன். நான் செய்தது தவறு தான் என்னை மன்னியுங்கள்'' என்று கண்ணீர் மல்க கூறினான்.

இரண்டாவது பயணி ''நீதிபதி அவர்களே, நான் ஒரு பொற்கொல்லன். நான் செய்த தங்க, வைர நகைகளை விற்பதற்காக பக்கத்து தேசத்தில் இருந்து வருகிறேன். நீங்கள் கூறும் இந்த வைர மோதிரம் என்னுடைய பரம்பரை மோதிரம். அதனால் இம்மோதிரம் உங்கள் மன்னருடையதாக இருக்க முடியாது'' என்றான்.

இதைக் கேட்ட நீதிபதி இரண்டாவது பயணியிடம் ''ஆம் நீர் கூறுவது சரியே. குற்றவாளியைக் கண்டுபிடிப்பதற்காக இந்த வைர மோதிரம் மன்னருடையது என்று பொய் கூறினேன்'' என்றார்.

பிறகு முதல் பயணியிடம் ''இந்த முறை நான் உன்னை மன்னிக்கிறேன். இனி இது போன்ற தவறு செய்தால் கடுமையான தண்டனை கிடைக்கும்'' என்று நீதிபதி எச்சரித்து அனுப்பி வைத்தார். இரண்டாம் பயணியும் தனக்குச் சரியான நீதி கிடைத்ததற்காக நீதிபதிக்கு நன்றி கூறிவிட்டுப் புறப்பட்டான்.


**பூ.க.கபிலன் கணபதி** (8ம் வகுப்பு) த/பெ. ந.கருணாநிதி, எண் 9, கதிர்வேல் காலனி, காங்கபம் ரோடு, திருப்பூர்- 641 604. தமிழ்நாடு.



# மாமியாரும் மருமகளும்

சுந்தரி தன் தாய் வீட்டில் மிகச் செல்லமாக வளர்ந்தவள். வீட்டு வேலை எதுவும் செய்ததில்லை. திருமணமானபின் அவள் மாமியார் அவளை வீட்டு வேலை அனைத்தையும் செய்ய வைத்தாள்.

தாய் வீட்டுக்குச் செல்லும் போதெல்லாம் தாயிடத்தில் தன் மாமியாரைப் பற்றி சுந்தரி குறை கூறுவாள். அதற்கு அவள் தாய் ''உன்னை எந்த வீட்டு வேலையும் செய்யவிடாமல் நாங்கள் தான் தவறு செய்து விட்டோம். அந்தத் தவறை உன் மாமியார் திருத்துகிறாள் என்று நினைத்துக் கொள்'' என்று புத்திமதி கூறுவாள். ஆனால் சுந்தரியின் தகப்பனார். ''வேலை கற்றுக் கொடுப்பதற்காக உன்னிடம் வேலை வாங்கினால் அது நல்ல விஷயம் தான். ஆனா ல் உன் மாமியார் உன்னைத் திட்டுவதும் மோசமாய் நடத்துவதும் சரியில்லை. உன் கணவனுக்கு நகரத்தில் வேலை வாங்கித் தந்து விடுகிறேன். உன்னுடைய கஷ்டங்கள் விலகும்'' என்றார்.

அதேபோல் அவளுடைய கணவன் அரவிந்தன் புதிய வேலையை ஏற்றுக் கொண்டு நகரத்தில் சுந்தரியுடன் குடித்தனம் செய்ய ஆரம்பித்தான். சுந்தரியின் மாமியார் கிராமத்திலேயே தங்கி விட்டாள். வீட்டு வேலைகள் செய்வதற்காக பானுமதி என்ற வேலைக்காரியை சுந்தரி நியமனம் செய் தாள்.

ஆனால் பானுமதியின் குணம் சுந்தரிக்கு வியப்பு அளித்தது. பக்கத்து வீட்டுப் பெண்ணான சாரதா வீட்டில் நன்கு வேலை செய்யும் பானுமதி சுந்தரியின் வீட்டில் எப்போதும் முணுமுணுத்துக் கொண்டும் எரிந்து விழுந்து கொண்டும் இருப்பாள்.

ஒருநாள் திடீரென சுந்தரியின் மாமியார் அங்கு வந்து சில மாதங்கள் தங்கப் போவதாக செய்தி அ னுப்பினாள். அதைக் கேட்டதிலிருந் து

– கஸ்தூரி ஸ்ரீவாஸ்தவ் –



சுந்தரி, மாமியார் வந்தால், தன்னை பழையபடி திட்டி வேலை வாங்கு வாள். அதாவது பரவாயில்லை. ஆனால் தன் வேலைக்காரியை அப்படி ஏதாவது செய்தால், அவள் உடனே வேலையை விட்டு நின்று விடுவாளே என்று நினைத்தாள். அதனால் உடனே சுந்தரி தன் கணவனிடம் ''நான் சொன்னால் உங்கள் அம்மா கேட்க மாட்டார்கள். நம் வேலைக்காரியுடன் ஒழுங்காக நடந்து கொள்ளும்படி நீங்களே அவர் களிடம் சொல்லிவிடுங்கள்'' என்றாள்.

அதேபோல் மாமியார் வந்தவுடன் சுந்தரியின் கணவனும் தன் தாயிடம், ''அம்மா, பானுமதி என்ற வேலைக் காரியை பணிவிடைக்காக அமர்த்தி உள்ளோம். அவள் மனம் நோகும்படி நீ ஏதாவது பேசினால் அவள் வேலையை விட்டு விடுவாள். ஆகையால் பார்த்து நடந்து கொள்'' என்று அறிவுரை தந்தான்.

ஆனால் கெட்டிக்காரியான மாமியார் மருமகள் தான் நேராகச் சொல்லாமல் தன் கணவனை விட்டு இதைச் சொல்லச் செய்திருக்கிறாள் என்று தெரிந்து கொண்டு விட்டாள். வேலைக்காரி நன்றாக வேலையை விட்டுப் போகட்டும், தன் மருமகள் கஷ்டப்படட்டும் என்ற எண்ணத் துடன் பானுமதியை நன்றாகத் திட்டி வேலை வாங்கினாள். ஆனால் ஆச்சரியம் என்னவெனில் பானு மதி மாமியார் சொன்ன வேலை எல்லாம் பணிவுடன் செய்ய ஆரம்பித்து விட்டாள்.

ஒரு நாள் மாமியாரின் அதிகாரம் எல்லைமீறிப் போகவே, பானுமதி, ''இப்படி எல்லாம் செய்தீர்களானால் நான் வேலையை விட்டு நின்று விடுவேன்'' என்று பயமுறுத்தினாள். உடனே சுந்தரியின் மாமியார், ''தாராளமாகப் போ. உனக்குப் பதிலாக வீட்டுவேலை எல்லாம் என் மருமகள் செய்வாள்'' என்று திமிராக பதில் கூறினாள்.

அதைக் கேட்டதும் பானுமதி மௌனமானாள். மாமியார் சொன்ன வேலைகள் எல்லாம் மறு பேச்சின்றி செய்தாள். சுந்தரிக்கு பானுமதியின் போக்கு மிகுந்த ஆச்சரியத்தை அளித்தது. முன்போல் பானுமதி எரிந்து விழுவதில்லை. வேலையை விட்டு விடுவேன் என்று பய முறுத்துவதும் இல்லை. எல்லாம் நன்மைக்கே என்று கருதிய சுந்தரி



ஒருநாள் கணவனிடம், ''உங்கள் அம்மாவின் போக்கில் மாறுதலே இல்லை. என்னையும் பானுமதியை யும் வார்த்தைகளால் துளைத்துக் கொண்டே இருக்கிறாள். ஆனால் பானுமதியின் போக்கு மாறிவிட்டது. ஒழுங்காக வேலை செய்கிறாள்'' என்று தன் அபிப்பிராயத்தைத் தெரிவித்தாள். இதையெல்லாம் கேட்ட சுந்தரியின் கணவனுக்கும் பானுமதியின் குணம் புதிராகவே இருந்தது.

இவ்வாறு இரண்டு மாதங்கள் கழிந்தன. சுந்தரியின் மாமியார் கிராமத்திற்குத் திரும்பிச் செல் வதையே மறந்து விட் டதைப் போல் தோன்றியது. ஆனால் சுந்தரியும் இதை அதிகமாகப் பொருட்படத்த வில்லை. மாமியாரின் அட்டகாசம் நாளுக்கு நாள் அதிகரித்து வந்தாலும் பானுமதி மிகப் பொறுமையுடன் முன்னைவிட அதிகமாகவே வேலை செய்து வந்தாள்.

ஒருநாள் பக்கத்து வீட்டு சாரதாவும், மாமியாரும் கோயிலுக்குச் சென்றி ருந்தனர். திரும்பி வரும்போது, சாரதா மெதுவாக சுந்தரியின் மாமியாரிடம் ''மன்னிக்க வேண்டும் நீங்கள் கிராமத்துக்கு எப்போது செல்வதாக இருக்கிறீர்கள்?'' என்று கேட்டாள். அதைக் கேட்டவுடனே மாமியாரின் கோபம் தலைக்கேறியது. ''நான் கிராமத்துக்குப் போவதைப் பற்றிக் கேட்க நீ யார்?'' என்று சீறினாள். ''மன்னிக்க வேண்டும்'' என்று பணிவுடன் தொடர்ந்த சாரதா

''நானும் உங்கள் மருமகளும் கிட்டத்தட்ட ஒரே வயது. உங்கள் வீட்டு வேலைக்காரிதான் என் வீட்டிலும் வேலை செய்கிறாள். அவளுடைய குணம் மிகவும் விசித்திரமானது. குடும்பத்தலைவியை யாராவது கடுஞ்சொற்களால் திட்டித் துன்புறுத்தினால் பானுமதி மிகுந்த மகிழ்ச்சி அடைவது உண்டு. அவளுடைய இந்த குணத்தை என் கணவர் அறிந்து கொண்டார். அவளைப் போல் நன்றாக வேலை செய்யக் கூடிய பெண்கள் இங்கு கிடைப்பது அரிது.

ஆகவே அவள் சந்தோசத்துடன் நன்றாக வேலை செய்ய வேண்டும் என்பதற்காக அவள் முன்னால் என்னை கடுஞ்சொற்களால் திட்டிக் கொண்டே இருப்பார். ஆகையால் என் வீட்டில் நன்றாக வேலை செய்கிறாள். அதேபோல் நீங்கள் வந்ததிலிருந்து, உங்கள் வீட்டில் இப்போது மிகவும் நன்றாக வேலை செய்கிறாள்.

நீங்கள் உங்கள் மருமகளைத் துன்புறுத்துவதுதான் இதற்கு காரணம் என்று நினைக்கிறேன். உண்மையில் சொல்லப் போனால், உங்கள் வீட்டில் பல மடங்கு அதிக வேலை செய்கிறாள். அப்படியானால் என் கணவர் பயன்படுத்தும் வசவு வார்த்தைகளை விட இன்னும் கடுமையான வார்த்தைகளால் நீங்கள் உங்கள் மருமகளைச் சாடுகிறீர்கள் என்று அர்த்தம் ஆகிறது. நான் உண்மையைச் சொன்னேன். அதற்காக நீங்கள் என்னை மன்னித்து விடுங்கள்'' என்றாள்.

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் சுந்தரியின் மாமியார் ஐம்புலன்களும் ஒடுங்கி அவமானத்தில் குன்றிப் போனாள். தன்னுடைய மருமகளைத் தான் நடத்தும் விதம் அண்டை அயல் வீடுகளுக்கெல்லாம் தெரிந்திருக்கிறது என்ற உண்மை புரிந்ததும், பேச முடியாமல் வெட்கித் தலை குனிந்தாள். அந்தக் கணத்திலிருந்து சுந்தரியின் மாமியாரின் போக்கில் பெருத்த மாறுதல் ஏற்பட்டு விட்டது. தன் மருமகளை அன்பான வார்த்தைகளுடன் பிரியமாக நடத்தத் தொடங்கினாள்.



# யார் கெட்டிக்காரன்?

ஒரு கிராமத்தில் சுப்பராமன் என்ற செல்வந்தர் இருந்தார். அவருக்கு சூரியன், சந்திரன் என்று இருபிள்ளைகள் இருந்தனர். இருவருக்கும் வயதுக்கேற்ற மூளை வளர்ச்சி இல்லை. இதை எண்ணி சுப்பராமன் மிகக் கவலையில் ஆழ்ந்திருந்தார்.

அவருடைய உறவினர்கள், ''நமது கிராமத்திற்கு ஒரு பண்டிதர் வந்துள்ளார். மூளை வளர்ச்சி குன்றியவர்களை சரியாக்குவதில் அவர் திறமைசாலி. அவரிடம் அழைத்துச் செல்'' என்று அறிவுரை வழங்கினர்.

சுப்பராமன் அந்தப் பண்டிதரை சந்தித்து தன் பிள்ளைகளைப் பற்றி எடுத்துரைத்தார். அதற்கு அந்தப் பண்டிதர் நான் உன் பிள்ளைகளை நேரில் வந்து பார்த்து அவர்களை சோதனை செய்த பிறகு குணமாக்குகிறேன்'' என்றார்.

ஒரு வாரத்திற்குப் பிறகு, ஒருநாள் பண்டிதர் சுப்பராமன் வீட்டுக்கு வந்தார். அப்போது சுப்பராமன் வீட்டுச்சமையல் அறையில் முளைக்கீரை மசியல் அடுப்பில் கொதித்துக் கொண்டிருந்தது. சுப்பராமனின் பிள்ளைகள் இருவரும் சாப்பிடுவதற்கு அமர்ந்திருந்தார்கள். அவர் தன் பிள்ளை களுக்கு தட்டில் சோறு போட்டதும் பண்டிதர் இருவரையும் பார்த்து, ''வாயில் சாதம் வைத்துக் கொண்டு அடுப்பில் கொதிக்கும் குழம்பை ஒரே ஒரு முறை பார்த்தவாறு சாப்பிடுங்கள். சுவையாக இருக்கும். எப்படி இருந்தது என்று என்னிடம் கூறுங்கள். ஜாக்கிரதை, ஒரு முறைக்கு மேல் பார்த்தால், உங்கள் உடல் நலம் கெடும்'' என்றார்.

மூத்தவன் பதிலேதும் சொல்லத் தெரியாமல் விழித்தான். இளையவன், ''அண்ணா அடுப்பில் கொதிப்பதை இரு முறை பார்த்தான். அவனுக்கு உடல் நலம் கெடப்போகிறது,'' என்றான்.

உடனே பண்டிதர் சுப்பராமனிடம், ''உன்னுடைய இரு பிள்ளைகளில் இளையவன் கொஞ்சம் கெட்டிக்காரன் என்று தோன்றுகிறது. முதலில் அவனை சரியாக்க முயற்சிக்கிறேன்,'' என்றார்.





# மாய மந்திரவாதி

## 10

*(துன்முகனின் தலையை வெட்டுவதில் தீவிரமாயிருந்த மாயக் கரடியிடமிருந்து, துன்முகனை அரக்கன் உக்கிரதண்டன் காப்பாற்றி, அவனை மந்திரவாதியிடம் பத்திரமாக அழைத்துச் செல்லும் பொறுப்பையும் தான் ஏற்றுக் கொண்டான். காட்டிலிருந்த வேடனும் மாயக்கரடியுடன் சந்திர சீலத்துக்குச் செல்லத் தயாராகி விட்டான். செல்லும் வழியில், யானைகளில் சவாரி செய்து வந்த வீரர்கள்திடீரெனத் தோன்றி மாயக்கரடியை அம்புகள் வீசித் தாக்கினர். அதன் பிறகு...)*

**த**ன் மீது விழுந்த அம்புகளை மாயக்கரடி தன் கோடாலியால் தடுத்தது. தும்பிக்கை அறுந்த யானையை அந்த வீரர்கள் மேல் மாயக்கரடி ஏவி விட, அந்த யானையும் எதிரிகளின் யானைகளுடன் மூர்க்கமாக சண்டை இட்டது. மாயக்கரடி, ''ஜய பைரவா'' என்று வீறிட்டுக் கத்திக் கொண்டே, தன் கோடாலியை எதிரி யானைகளின் மீது எறிந்தது. அந்தக் கோடாலி பட்டு, எதிரி யானைகளின் ஒன்றின் தந்தம் உடைந்து நொறுங்கியது.

உடனே யானை பயந்து ஓட ஆரம்பித்தது. மாயக்கரடியைத் தாக்கிய யானை வீரர்கள் இதைக் கண்டு கலவரம் அடைந்தனர். ''யாரோ கரடி வேடம் அணிந்து தமாஷ் செய்கிறான் என நினைத்தோம். இந்தக் கரடி பயங்கர



மாக உள்ளதே'' என்று சொல்லிக் கொண்டு பின் வாங்கி ஓடத் தொடங்கினர். தங்கள் யானைகள் மீது அமர்ந்து புறமுதுகு காட்டிய வீரர்களை, கரடி துரத்தி ப் பி டித்தது. இதற்குள் கீழே விழுந்த வேடன் அதிர்ச்சியில் மயக்கம் அடைந்து விட்டான்.

எதிரிகளை வழி மறித்த கரடி, ''நான் நிஜக் கரடி அல்ல. குற்றம் செய்தவர்களின் தலைகளைச் சீவும் மாயக்கரடி. என்னுடைய கேள்வி களுக்குப் பதில் சொல்லுங்கள்'' என்றது. மாயக்கரடியின் பயங்கர உருவத்தையும் அதன் சீற்றத்தையும் கண்டு அஞ்சிய அந்த வீரர்கள் அப்படியே நின்று விட்டனர். அவர்களை நோக்கி கரடி, ''அடே டய், உண்மையைச் சொல்லுங்கள். 'துன் முக ராஜா வாழ்க' என்று கோஷம் போட்டீர்களே! நீங்கள் உண்மையில் யார்?'' என்று கேட்டது.

வீரர்களில் ஒருவன் கரடிக்கு வணக்கம் தெரிவித்து விட்டுப் பணிவான குரலில், ''கரடி ராஜாவே, உதயகிரி மன்னரான துன்முக ராஜாவின் வீரர்கள் நாங்கள். எங்கள் மன்னரை யானை மீது அமர்ந்து கரடி வேடமணிந்த ஒருவன் கைதியாக இந்தக் காட்டினுள் வைத்திருப்பதாக அறிந்தோம். எங்கள் மன்னரை விடுவிக்கவே நாங்கள் காட்டுக்கு வந்தோம்'' என்றான்.

''அட, உங்கள் ராஜாவை விடுதலை செய்வதற்காக நீங்கள் நால்வர் மட்டுமே வந்தீர்களா? நம்ப முடியவில்லையே என்னால்!'' என்று கரடி கேட்டதும் அந்த நால்வரும் திருதிருவென விழித்தனர்.

இதைக் கண்ட கரடி, ''அடேய்! உண்மையைச் சொல்லுங்கள். ஏதாவது என்னிடம்இருந்து மறைத்தால், இந்தக் கோடாலியால் உங்களைப் பிளந்து விடுவேன்'' என்று பயமுறுத்தியது.

அதைக் கேட்டு பயந்துபோன வீரர்களில் ஒருவன் உடனே உண்மையைக் கூறினான். ''கரடி ராஜா, துன்முக ராஜா நாட்டில் இல்லாத சமயம் பார்த்து பகை மன்னனான சூரிய பூபதி எங்கள் நாட்டைக் கைப்பற்றி விட்டான். அப்போது நடந்த சண்டையில் நாங்கள் நால்வர் மட்டும் தப்பித்துக் கொண்டு எங்கள் ராஜாவைத் தேடிக் கொண்டு இங்கே வந்தோம்''

என்றான். ''உங்களுடைய ராஜ பக்தியை நான் மெச்சுகிறேன். ஆனால் எந்த மன்னனுக்காக நீங்கள் இவ்வாறு சிரமப்படுகிறீர்களோ, அந்த மன்னன் துன்முகன் காளி வர்மன் என்ற வீரனையும் எங்கள் மாய மந்திரவாதியையும் அவமானம் செய்ய முற்பட்டு தானே அபாயத்தில் சிக்கிக் கொண்டான். அவன் உயிருடன் உதயகிரி திரும்ப மாட்டான். ஆகவே நீங்கள் வேறு எந்த மன்னனிடமாவது சென்று பணி செய்யுங்கள்'' என்றது.

அப்போது துன்முகனின் மெய்க் காப்பாளன் அங்கு வந்து சேர்ந்தான். ''என்ன நடந்தது கரடியாரே! யானைகளின் பிளிறல் சத்தம் கேட்டதும், உங்களுடைய யானையை மற்ற காட்டு யானைகள் தாக்குகின்றன என்று நினைத்தோம். அதனால்தான் நான் ஓடோடி வந்தேன்'' என்றான்.

இதற்குள் மயக்கம் தெளிந்த வேடன் எழுந்து நின்றான். எதிரில் யானை மீது அமர்ந்த வீரர்களைக் கண்டதும் ''எங்கள் கரடி ராஜாவைத் தடுக்கும் நீங்கள் யார்? '' என்று கத்தினான். ஆனால் துன்முகனின் மெய்க்காப்பாளனை அடையாளம் கண்டு கொண்ட அவனது வீரர்கள் ''மெய்க்காப்பாளரே, எங்களைக் காப்பாற்றுங்கள்'' என்று தங்கள் யானைகளிலிருந்து அவசரமாக கீழே இறங்கினர். அவர்களை அடையாளம் கண்டு கொண்ட மெய்க் காப்பாளன் ''அட, ராஜ்ஜியத்தை விட்டு நீங்கள் ஏன் காட்டுக்கு



வந்தீர்கள்? '' என்று கேட்டான். இதைக்கேட்ட கரடி பலமாக சிரித்தது. ''உனக்கு விஷயம் தெரியாதா? உன்னுடைய நாட்டை எதிரிகள் கைப்பற்றி விட்டனர். ஆனால் இன்னும் சிறிது நேரத்தில் உயிரை இழக்கப் போகிற உன்னுடைய அரசனுக்கு நாடு இருந்தாலென்ன பகைவர்கள் பிடித்தாலென்ன! எல்லாம் ஒன்று தான்'' என்றது கரடி.

இதற்குள் துன்முகன், உக்கிர தண்டன் நாகமல்லன் ஆகியோர் அந்த இடத்திற்கு வந்து விட்டனர். தன் வீரர்களைக் கண்ட துன்முகன், ''நீங்கள் எதற்காக இங்கே வந்தீர்கள்?'' என்று கேட்டான்.

அவனது வீரர்கள் பதில் சொல்வதற்கு முன், கரடி முன்வந்து, 'துன்முகா! இதே கேள்வியை உன்



மெய்க்காப்பாளன் ஏற்கனவே இவர்களிடம் கேட்டு விட்டான். நான் சொல்கிறேன் கேள். உன்னுடைய நாட்டை உன்னுடைய பகைவன் கைப்பற்றிக் கொண்டு விட்டான்'' என்றது.

''அந்தப் பகைவன் யார்? '' என்று கோபத்துடன் தன் உறையிலிருந்து வாளை உருவினான் துன்முகன். ''எனக்குத் தெரிந்து நமது ஒரே பகைவன் சூரிய பூபதிதான். அவன் நமது நாட்டைக் கைப்பற்றி விட்ட போது நீங்கள் கோழைகள் போல் இங்கே ஓடி வந்து விட்டீர்கள ா? உங்கள் தலைகள் மண்ணில் உருளட்டும்'' என்று அவர்கள் மேல் பாய்ந்தான்.

உடனே உக்கிரதண்டன் துன் முகனைத் தடுத்து நிறுத்தினான். ''துன்முகா! அவசரப் படாதே த. முதலில் இந்தக் கரடியிடமிருந்தும், மாய மந்திரவாதியிடமிருந்தும் உன் தலையை பத்திரமாக பாதுகாத்துக் கொள். அதன்பிறகு உன் நாட்டை மீட்பதற்கு நா ங்கள் உதவி புரி கிறோம்'' என்றான்.

உடனே சற்று சாந்தம் அடைந்த துன்முகன், ''உக்கிரதண்டரே! எனக்கு மரணம் நிச்சயமானால், நான் ஓர் அரசனாக இறக்கவே ஆசைப் படுகிறேன். உங்களுடைய உதவி யுடன் அந்த சூரிய பூபதியின் தலை யைக் கொய்து கோட்டை வாயிலில் தொங்க விட்ட பிறகு, இந்தக் கரடியோ அல்லது மந்திரவாதியோ என்னைக் கொல்லட்டும்'' என்று வீர வசனம் பேசினான்.

''துன்முகன் சொன்னதைக் கேட்டீரா கரடியாரே'' என்ற உக்கிர தண்டன் தொடர்ந்து, ''அவன் கேட்பதிலும் நியாயம் இருக்கிறது. அதன்படி செய்யலாமா? '' என்று உக்கிரதண்டன் கேட்டான்.

கரடி எல்லாரையும் ஒருமுறை பார்த்துவிட்டு, சற்று யோசித்த பிறகு ''நீங்கள் எல்லாரும் சேர்ந்து என்னை ஏமாற்றப் பார்க்கிறீர்களா? '' என்று கேட்டது.

உக்கிரதண்டன் கரடியின் தோளில் கையை வைத்து அன்புடன், ''கரடி யாரே, உன்னுடைய கோடாலியின் வலிமையை நாங்கள் நன்கு அறிவோம். ஆனால் மந்திரவாதி உன்னை துன்முகனின் தலையைக் கொண்டு வரச் சொன்னாரா இல்லை பொலிவிழந்து நிராயுதபாணியாக

இருக்கும் துன்முகனின் தலையைக் கேட்டாரா?'' என்றான்.

''உக்கிரதண்டா! இப்படி எல்லாம் பேசி என்னைக் குழப்பாதே. தெளிவாகச் சொல்'' என்று கரடி வெறுப்புடன் சொன்னது. ''நான் சொல்வதைக் கேள்'' என்ற உக்கிர தண்டன் தொடர்ந்து ''தன்னுடைய உயிருக்குள்ள அபாயத்தைவிட தன்னுடைய நாட்டை இழந்ததைப் பற்றி நினைத்தே துன்முகனின் மனம் அதிகமாக புண்பட்டிருக்கிறது. ஆகவே அவனுக்கு சூரிய பூபதியை விரட்டி அடிக்கவும் உதயகிரியின் அரசன் அவனே என்பதை நிலை நாட்டவும் ஒரு வாய்ப்பு கொடுப்போம். அதன் பிறகு அவனை மந்திர வாதியிடம் அழைத்துச் செல்வோம்'' என்றான்.

துன்முகன் தன் இரு கைகளையும் தலைக்குமேல் குவித்துக் கரடியை வணங்கி, ''பிரபு, நான் இறப்பதற்கு முன்னால் எனது இறுதி ஆசையை நிறைவேற்றி வையுங்கள்'' என்றான். இதற்குள் அந்த வேட்டுவ இளைஞன் முன் வந்து, ''அந்த சூரிய பூபதியைக் கொல்ல எனக்கு அனுமதி தாருங்கள். என்னைப் போன்றவர்களிடமும் வரி வசூல் செய்த கொடியவன் அவன்'' என்றான். அடுத்த கணமே நாக மல்லனும் தன் வாளை உருவிக் கொண்டு ''அந்த சூரிய பூபதி ஒரு கடைந்தெடுத்த அயோக்கியன். நாங்களே கொள்ளைக்காரர்கள் என்றால் நாங்கள் சம்பாதிக்கும் பணத்தையும் வரி என்ற பெயரால்



கவர்ந்து கொள்ளும் பெரிய கொள்ளைக்காரன் அவன். ஆகவே அவனை நானே கொன்று விடுகிறேன்'' என்றான்.

''பலே, பலே! அப்போது எல்லாரும் போவோம், வாருங்கள். அவனுடைய தலையையும் வெட்டி மந்திரவாதியிடம் கொடுத்து விடலாம். சரி, உதயகிரி இங்கிருந்து எவ்வளவு தூரத்தில் உள்ளது?'' என்று கரடி கேட்டது.

''எனக்கு வழி தெரியும். என்னுடன் வாருங்கள். அரைமணி நேரத்தில் சென்று விடலாம்'' என்று முன்வந்த வேடன், ''கரடியாரே, தங்களுடைய வாகனத்தில் நானும் ஏறிக் கொள்ளட்டுமா?'' என்றான். கரடியின் அனுமதியுடன், வேடன் தும்பிக்கை அறுந்த யானையின் மீது ஏறிக் கொண்டான்.

அடுத்து உக்கிரதண்டன் துன்முகனை தந்தம் உடைந்த யானையின் மீது ஏற்றி உட்கார வைத்துவிட்டு, ''கரடியாரே, என்ன இருந்தாலும் துன்முகன் ஒரு ராஜா. கொஞ்ச நேரத்திற்காவது அவனுக்கு ராஜ மரியாதை அளிப்போம். தயவு செய்து அனுமதி கொடு'' என்றான்.

இவ்வாறு துன்முகனும் இரண்டு வீரர்களும் தந்தம் உடைந்த யானையின் மீது ஏறிக்கொள்ள, நாகமல்லனும் அவனது சகாக்களும் மற்றொரு யானையில் ஏறிக் கொள்ள அனைவரும் உதயகிரி நோக்கிப் புறப்பட்டனர்.

உதயகிரியை அணுகியதும் துன்முகன் கவலையுடன், ''கரடியாரே பூபதியிடம் கட்டாயம் இப்போது படைவீரர்கள் இருப்பார்கள். நாம் சிலர் மட்டும் சேர்ந்து அவனுடன் எப்படி மோத முடியும்?'' என்று சந்தேகத்தை எழுப்பினான். அதைக் கேட்ட உக்கிரதண்டன் ''என்னுடைய கதாயுதம் கரடியாரின் கோடாலி ஆகிய இரண்டு ஆயுதங்களே போதும். அதிகம் சண்டையிடாமல், வெகு விரைவில் பூபதியின் தலையை சீவ வேண்டும்'' என்றான்.

''நான் ஒரு யோசனை சொல்கிறேன். நானும் என்னுடைய ஆட்களும் முதலில் பூபதியை சந்திப்போம். துன்முகனை கைதியாகப் பிடித்து வந்துள்ளோம். பார்க்க வாருங்கள் என்று அழைப்போம். அதை நம்பி ஒரு சில வீரர்களை மட்டும் அழைத்துக் கொண்டு பூபதி இங்கே வந்து விடுவான்'' என்றான் நாகமல்லன்.

''இது அபாரமான யோசனை . நாகமல்லா, நீ உடனே புறப்படு'' என்று உக்கிரதண்டன் நாகமல்லனையும் அவனுடைய ஆட்களையும் அனுப்பி வைத்தான்.

நாகமல்லன் தன் ஆட்களுடன் கோட்டை வாயிலை நெருங்கிய அதே நேரம், திடீரென கோட்டை வாயில் பலத்த சத்தத்துடன் திறந்தது. கோட்டைக்குள்ளிருந்து ஏராளமான குதிரை வீரர்களும், காலாட்படை வீரர்களும் வெளியே வந்தனர்.

(தொடரும்.)





நவீன வேதாளக் கதை

# தன்மானமா, பொது நலமா?

தன் முயற்சியில் சற்றும் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழே இறங்கி, அதைத் தூக்கிக் கொண்டு மயானத்தை நோக்கிச் செல்லுகையில் அதனுள் இருந்த வேதாளம் பலமாக சிரித்து விட்டு, 'மன்னா, இந்த பயங்கர நடுநிசியில் எந்த லட்சியத்தை அடைவதற்காக நீ இவ்வாறு பாடுபடுகிறாய் என்று எனக்குப் புரிய வில்லை. இப்படிப்பட்ட லட்சியவாதி இளைஞர்கள் உலகில் பலர் உள்ளனர். தனது லட்சியத்திற்காக உயிரைக் கூட விடத் தயாராயிருப்பதாக



அறை கூவுகின்றனர். ஆனால் இப்படிப்பட்ட வீரர்கள் சோதனை யான சூழ்நிலை வரும்போது கோழை களாக மாறி விடுகின்றனர். அப்படிப் பட்ட வாய்ச் சொல் வீரனான கிரிதரனின் கதையைக் கூறுகிறேன் கேள்'' என்றது.

அடர்ந்த மலைகள் சூழ்ந்த பகுதியில் மலை அடிவாரத்தில் பார்கவபுரி என்ற கிராமம் இருந்தது. அந்த பார்கவபுரிக்கு கொண்டதேவன் என்ற காட்டு சாதியைச் சேர்ந்தவன் தலைவனாக இருந்தான். அவனுக்கு கிரிதரன் என்ற ஒரே மகன் இருந்தான். கிரிதரன் சிறு வயதிலிருந்தே தன்மானம் மிக்கவனாக இருந்தான். தலைவனின் மகனாயிருந்தும், எல்லா வாலிபர்களுடனும் சகஜமாகப் பழகுவான். தனது இனத்து வாலிபர் களிடம் எப்போதும் தன்மானத்தைப் பற்றியும் சுதந்திரமாக இருப்பதின் அவசியத்தைப் பற்றியும் ஓயாமல் அறிவுரை தந்து கொண்டே இருப்பான்.

அங்குள்ள பார்கவி அம்மன் கோவில் திருவிழாக் காலங்களில் இளைஞர்களிடையே மல்யுத்தம், வில் அம்பு போட்டி ஆகிய போட்டிகள் நடைபெறுவதுண்டு. அப்போது கிரிதரன் தனது இனத்து இளைஞர்களை போட்டிகளில் பங்கேற்க பெரிதும் ஊக்குவிப்பான். தனது குலத்தின் மேன்மைக்காகவும், சுதந்திரத்திற்காகவும் உயிர்த் தியாகம் செய்யவும் தயாராயிருக்க வேண்டும் என்று மனதில் உத்வேகம் எழும்படி அனைவருக்கும் கூறுவான்.

பார்கவபுரியின் காட்டு சாதியினர் காஞ்சனபுரி அருகில் உள்ள மன்னனுக்கு அடிபணிந்து நடந்து வந்தனர். ஆனால் பல ஆண்டுகளுக்கு முன் பார்கவபுரி சுதந்திரமாக இருந்தது. திடீரென நாம் ஏன் காஞ்சனபுரிக்கு அடிமைகள் போல் நடக்க வேண்டும் என்ற தன் சந்தேகத்தை தன் தந்தையிடமும் மற்ற பெரியவர்களிடமும் கிரிதரன் அடிக்கடி கேட்பதுண்டு. ஆனால் அவர்கள் உண்மையைச் சொல்ல மறுத்து விட்டனர்.

ஒருநாள் கிரிதரன் பார்கவி அம்மன் கோயிலின் கிழட்டுப் பூசாரியை சந்தித்து உண்மையை அவனிடம் இருந்து அறிய முயன்றான். பூசாரியும் கிரிதரனுக்கு அந்த உண்மையை சொல்லிவிட்டான். பார்கவபுரியில்

உள்ள வளம் மிக்க காடுகளில் கலை மான்களும், பல மூலிகைச் செடிகளும் நிரம்பி இருந்தன. இந்த வளங்களால் கவரப்பட்ட காஞ்சனபுரி மன்னன் யாவற்றையும் அபகரிக்கத் தொடங்கினான்.

ஒரு சமயம் பார்கவி அம்மன் கோயில் திருவிழா நடந்து கொண்டு இருந்தது. அந்த விழாவில் காஞ்சனபுரி சேனாதிபதியும் தன் வீரர்களுடன் கலந்து கொண்டான். அம்மன் வழிபாட்டில் பூசாரிக்கு திடீரென ஆவேசம் வந்து கூக்குரலிட்டான். பூசாரிமேல் அம்மன் வந்திருக்கிறாள் என நம்பிய அனைவரும் பய பக்தியுடன் பூசாரி சொல்வதைக் கேட்டனர். ''பார்கவபுரி மக்கள் நலமாக இருக்க வேண்டுமானால் அம்மன் நான் சொல்வதைக் கேளுங்கள். ஒவ்வொரு பௌர்ணமி அன்றும் மூன்று பானை நிறைய தேன், முப்பத்தியொன்று கலைமான் கொம்புகள் மூன்று கூடை மூலிகைகள் யாவற்றையும் எனக்கு படைக்க வேண்டும். பிறகு அவற்றை காஞ்சனபுரி படை வீரர்களுக்கு கொடுத்திட வேண்டும்'' என்று பூசாரி கூற, அதை அப்படியே காட்டு சாதியினர் கடைப் பிடிக்கத் தொடங்கினர். அன்றிலிருந்து பார்கவபுரி காஞ்சனபுரிக்கு அடிபணிந்து நின்றது.

இந்தச் செய்தியை பூசாரி மூலமாக அறிந்ததும் கிரிதரனுக்கு அவமானமும் கோபமும் ஏற்பட்டன. சாமி ஆடிய பூசாரி அன்று கூறியவற்றில்



மற்றொரு விஷயம் என்னவெனில் காஞ்சனபுரி மன்னனே மனமுவந்து வேண்டாம் என்று கூறும் வரை இந்த வழக்கம் நீடிக்கும் என்பதே. அன்று முதல் கிரிதரன் காட்டு சாதி இளைஞர்களிடம், நாம் கஷ்டப்பட்டு உழைத்து தயாரிக்கும் தேன் மற்றும் பல காட்டுப் பொருள்களை நாம் ஏன் அன்னியருக்குக் கொடுக்க வேண்டும்? இது நாம் வசிக்கும் இடம். இங்கு உற்பத்தியாகும் பொருட்கள் நமக்கு சொந்தம். காஞ்சனபுரிக்கு அடிமையாக நாம் ஏன் வாழ வேண்டும்? '' என்று ஒவ்வொருவர் மனதிலும் புயலைக் கிளப்பினான்.

தன் மகனின் செயல்களைக் கண்டு அஞ்சிய கொண்டதேவன், ''பலம்



மிக்க காஞ்சனபுரியை நம்மால் எதிர்த்துப் போரிட முடியாது. ஆகவே நீ இவ்வாறு மற்றவர்களை தூண்டி விடுவதை நிறுத்து'' என்றான்.

கிரிதரனும், ''அப்பா, அரசனே மனமுவந்து வேண்டாம் என்றால் நாம் இவ்வாறு கப்பம் செலுத்தத் தேவையிருக்காது இல்லையா? நான் அரசனைப் பார்த்துக் கேட்டு வருகிறேன்'' என்று சொல்லிவிட்டு காஞ்சனபுரிக்குச் சென்றான்.

மறுநாளே தனது இரு நண்பர்களுடன் காஞ்சனபுரி மன்னனை சந்தித்த கிரிதரன் தங்கள் இன மக்கள் மிகவும் சிரமப்பட்டு அடையும் காட்டுப் பொருட்களை கப்பமாக செலுத்தி விடுவதால் தங்களுக்கு ஒன்றும் இல்லாமல் கஷ்டப் படுகிறார்கள் என்று விளக்கினான்.

ஆனால் மன்னன் அலட்சியமாக, ''நீங்கள் எங்களுக்கு அடிமை. உங்களால் கப்பம் செலுத்த முடியாவிட்டால், நீங்கள் உங்கள் ஊரை விட்டு வெளியேறுங்கள்'' என்றான்.

''அரசே, நாங்கள் பிற ந்த ஊரை விட்டு வெளியேறுவது என்பது எங்களால் நினைத்துக் கூடப் பார்க்க முடியாத விஷயம். மன்னிக்கவும்'' என்று சொல்லிவிட்டு வெளி யேறினான்.

ஒரு வாரம் கழிந்தது. ஒருநாள் மன்னனது சபையில் பார்கவபுரி இளைஞன் ஒரு கடிதம் கொண்டு வந்தான். அதில் எழுதப்பட்டிருந்த விஷயம் இதுதான்: ''அரசே, ஒரு பூசாரியின் பயமுறுத்தலுக்கிணங்கி எங்கள் முன்னோர்கள் உங்களுக்குக் கப்பம் செலுத்த இணங்கினார்கள். மூன்று தலைமுறையாக அதைத் தொடர்ந்து செய்கிறோம். ஆன ால் காட்டில் விளைவதை எல்லாம் உங்களுக்குக் கொடுத்துவிட்டு நாங்கள் ஒன்றுமில்லாமல் கஷ்டப் படுகிறோம். உழைப்பது நாங்கள், ஆனால் அதன் பயனைப் பெறுவது நீங்கள். நான் நேரடியாக உங்களைக் கண்டு இதுப் பற்றி பேசியும் நீங்கள் இணங்கவில்லை. ஆகவே பார்கவ புரி உங்களுக்கு இனி பணியப் போவதில்லை. நாங்கள் சுதந்திரத்தை விரும்புகிறோம். நீங்கள் இன்னும் இணங்காவிடில் உங்களுடன் போர் செய்யவும் தயாராக இருக்கிறோம். ஆனால் வீணாகப் போர் புரிவதால் ஏற்படும் உயிர் இழப்பைத் தடுக்க

ஒரு திட்டம் வைத்துள்ளேன். அதன்படி உங்களுடைய வீரர்களில் ஒருவனை என்னுடன் மல்யுத்தம் புரியச் சொல்லுங்கள். நான் வெற்றி பெற்றால், எங்களுக்கு சுதந்திரம் தாருங்கள். நான் தோல்வி அடைந்தால், நாங்கள் அனைவரும் ஊரை விட்டு வெளியேறி விடுகிறோம். இப்படிக்கு கிரிதரன்.''

இந்தக் கடிதத்தைப் படித்த அரசன் கோபமுற்றாலும், அதை அடக்கிக் கொண்டு கடிதம் கொண்டு வந்தவனிடம் ''உங்கள் கிரிதரனுடைய வேண்டுகோள்படி அடுத்த பௌர்ணமி அன்று மல்யுத்த போட்டி காஞ்சனபுரியில் நடைபெறும்'' என்று அறிவித்தான்.

அடுத்த பௌர்ணமியன்று மல்யுத்த போட்டியை எதிர்பார்த்து கிரிதரன் தனது இரண்டு நண்பர்களுடன் காஞ்சனபுரியை அடைந்தான். ஆனால் கிரிதரன் காஞ்சனபுரியை அடைந்ததுமே அரசனது காவல் வீரர்களால் கைது செய்யப்பட்டான். கிரிதரனை அரச சபைக்குக் கட்டியிழுத்துச் சென்றனர்.

கிரிதரனைப் பார்த்து அரசன் ''உன்னுடைய வீரத்தை மெச்சுகிறேன். ஆனால் நீ என்னையே எதிர்க்கத் துணிந்து, என்னிடம் இப்போது சிக்கிக் கொண்டாய். களங்கமற்ற காட்டு சாதி மக்களின் மனதை நீ கெடுத்து விட்டாய். முறையாக கப்பம் செலுத்தி வந்தவர்களின் மனதில் தன்மானம், கௌரவம், சுதந்திர உணர்ச்சி ஆகியவற்றை விதைத்து அவர்களை அரசுக்கு எதிராக திருப்பி விட்டாய். நீ செய்தது



சாதாரணக் குற்றம் அல்ல, ராஜ துரோகம். இதற்காக உனக்கு மரண தண்டனை வி  திக்க என்னால் முடியும். ஆனால் வீணாக இரத்தம் சிந்த எனக்கும் விருப்பமில்லை. பார்கவபுரிக்கு சுதந்திரம் கொடுக்க நான் தயார். ஆனால் அதற்கு பதிலாக நீ எங்கள் அரண்மனையில் உன் சுதந்திரத்தை இழந்து ஒரு பணி யாளனாக இருக்க வேண்டும் சம்மதமா? '' என்று கேட்டான். இதைக் கேட்ட கிரிதரனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. சற்று நேரம் மௌனமாக இருந்த கிரிதரன் பிறகு, ''உங்களுடைய முடிவை நான் ஒப்புக் கொள்கிறேன். உங்களுக்கு அடிமை யாக இருக்கிறேன்'' என்றான்.

கதையை கூறி முடித்ததும் வேதாளம் விக்கிரமனை நோக்கி ''மன்னா, சிறு வயதிலிருந்தே தன்மானம் என் உயிர் மூச்சு என்று முழங்கிக் கொண்டிருந்த கிரிதரன் ஆபத்தில் சிக்கியதும் தன் கொள்கையை விட்டு ஒரு கோழை யாகி விட்டான் . அவனுடைய செய்கை ஆச்சரியமாக இல்லை? அவனிடம் இந்த மாறுதல் ஏன் ஏற்பட்டது? சூழ்நிலைக்குத் தகுந்தாற்போல் வளைந்து கொடுப்பது என்று தீர்மானித்து விட்டானா? என்னுடைய கேள்வி களுக்குப் பதில் தெரிந்தும் நீ மௌனமாக இருந்தால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகும்'' என்றது.

உடனே விக்கிரமன் ''கிரிதரன் கோழையாகவில்லை. ஆபத்தில் சிக்கியதால் ம  னம் மாறி தன் மானத்தை வி  டவுமில்லை. தன்னுடைய இனமக்களின் சுதந்திர த்தை அவன் பெரிதும் விரும்பினான். அதற்காக தான் அடிமையாக மாறத் தயாராகிவிட்டான். தனது ஊருக்காக தனது சுதந்திரத்தை தியாகம் செய் தான். பொது நலத்துக்காக தன்னுடைய சுதந்திரத்தைத் தியாகம் செய்த தியாகி என்றே கிரிதரனைக் கருதலாம்'' என்றான்.

விக்கிரமனது இந்த சரியான பதிலால் அவனது மௌனம் கலையவே வேதாளம் தான் சுமந்து வந்த உடலோடு மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# எழுத்தறிவித்தவன் இறைவன் ஆவான்

இந்திய ஜனாதிபதி டாக்டர் ஏ.பி.ஜே.அப்துல் கலாமின் வாழ்க்கையிலிருந்து சில சுவையான பகுதிகளைக் காண்போமா?

இந்தியா சுதந்திரம் அடைந்த நேரத்தில் பஞ்சாயத்து தேர்தல்கள் நடந்தன. ஜனாதிபதியின் தந்தை ஜனாப் அவுல் பாகிர் ஜெயினுலாப்தீன் ராமேஸ்வரத்தின் பஞ்சாயத்து தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவ்வாறு அவர் தேர்ந்தெடுக்கப்பட்டதன் காரணம், அவர் ஒரு பரோபகார சிந்தையுள்ள மனிதராக இருந்ததுதானே தவிர அவருடைய அந்தஸ்திற்காகவோ அல்லது மதத்திற்காகவோ அல்ல.

ஒரு நாள் மாலைப் பொழுதினில் திரு அப்துல் கலாம் அவர்கள் தனது வீட்டில் படித்துக் கொண்டிருந்த நேரம் யாரோ ஒரு நபர் அவர் தந்தையைத் தேடி வந்தார். அவரது தந்தை தொழுகைக்காக சென்றிருந்ததால், வந்தவர் அவரது தந்தைக்காகக் கொண்டு வந்திருந்த ஒரு பொட்டலத்தை கட்டில் மேல் விட்டுச் செல்லும்படி திரு அப்துல் கலாம் அவரிடம் சொன்னார்.

அவரது தந்தை வீடு திரும்பியவுடன் அந்தப் பொட்டலத்தைப் பிரித்துப் பார்த்தவர் திடுக்கிட்டார். அதனுள் விலையுயர்ந்த வேட்டி, துண்டு ஆகியவையும் பழங்களும் இனிப்புகளும் இருந்தன. என்னவென்று கூடத் தெரிந்து கொள்ளாமல் கண்டவர்கள் கொடுத்தப் பொருட்களை தன் வீட்டில் விட்டுப் போகச் சொன்னதற்காக



அவருடைய தந்தை தன் மகன் மீது கோபம் அடைந்து அவரை அடிக்கத் தொடங்கினார். கடவுள் ஒருவனை ஒரு பதவியில் அமர்த்தும் போது அதற்குத் தேவையானவற்றைக் கடவுளே தருவார் என்றும் அதற்குமேல் மற்றவர்கள் தருவதை ஒப்புக் கொள்வது பெருங்குற்றமாகும் என்று கூறி, ''பரிசு கொடுப்பவர்கள் ஏதோ ஓர் உள் நோக்கத்துடன் தான் தருகின்றனர் ஆதலால் பரிசை ஒப்புக் கொள்வது பாவமாகும்'' என்றும் சொன்னார். தன் தந்தை கூறியது திரு அப்துல் கலாமின் மனதில் ஆழமாகப் பதிந்தது.

அவர் வாழ்க்கையில் திருப்பத்தை ஏற்படுத்திய மற்றொரு நிகழ்ச்சி இது.

எட்டாம் வகுப்பில் அவர் பயின்று கொண்டிருக்கையில் சிவசுப்பிரமணிய அய்யர் என்ற மிக நல்ல ஆசிரியர் விஞ்ஞானம் கற்பித்து வந்தார். பறவைகள் எப்படிப் பறக்கின்றன என்பதைப் பற்றி ஒருநாள் வகுப்பில் சிவசுப்பிரமணிய அய்யர் விரிவாக விளக்கினார். இறுதியில் மாணவர் களை நோக்கி தான் விளக்கியது புரிந்ததா என்று கேட்டார். அனைவரும் மௌனமாக இருக்கையில் திரு அப்துல் கலாம் மட்டும் தைரியமாக எழுந்து நின்று தனக்குப் புரியவில்லை என்றார்.



அவரைத் தொடர்ந்து மற்றவர்களும் தங்களுக்குப் புரியவில்லை என்றனர். ஆனால் அவர்களுக்குப் புரியவில்லை என்பதற்காக அந்த ஆசிரியர் சலிப்புக் கொள்ளவில்லை. அதற்கு பதிலாக வகுப்பிலுள்ள அனைவரையும் அன்று மாலை கடற்கரைக்கு அழைத்துச் சென்றார்.

கடற்கரைக்குச் சென்று அங்கு பறந்து கொண்டிருந்த பறவைகளைக் காட்டி, அவை எவ்வாறு பறக்கின்றன என்பது பற்றியும் எவ்வாறு வெவ்வேறு திசை களில் திரும்புகின்றன என்பதைப் பற்றியும் தெளிவாக விளக்கினார். வகுப்பறையில் முப்பது நிமிடங்கள் விளக்கியும் புரியாதது, நேரில் கண்ட வுடன் பதினைந்தே நிமிடங்களில் அனைவருக்கும் புரிந்து விட்டது. மாண வர்கள் தெளிவாகப் புரிந்து கொள் வதற்காக இந்த அளவிற்கு பாடுபட்டு முயற்சித்த சிவசுப்பிரமணிய அய்யரை ஒரு மிகச்சிறந்த ஆசிரியராக இன்றும் திரு அப்துல் கலாம் எண்ணுகிறார்.

அன்று நடந்த நிகழ்ச்சி திரு அப்துல் கலாமின் வாழ்க்கையில் ஒரு திருப்பு முனையாக அமைந்தது. வாய்ப்புக் கிடைத்ததால், விண்ணில் பறக்கும் விமானங்களைப் பற்றிய கல்வியை தாம் எதிர்காலத்தில் பயிலவேண்டும் என்ற அடங் காத ஆர்வத்தை அவருக்கு உண்டு பண்ணியது. அதே போல் அவர் மெட்ராஸ் இன்ஸ்டியூட் ஆஃப் டெக்னா லஜியில் சேர்ந்தபொழுது, 'ஏரோனாடிகல் என்ஜினீயரிங்' எனும் விமானம் பற்றிய தொழில் நுட்பக்கல்வியையே அவர் பயிலத் தேர்ந்தெடுத்தார். அப்போது அவருக்கு வயது பதிமூன்று தான்.

தொழில் நுட்பக்கல்வி பயின்ற பிறகு அவர் பெங்களூரில் அரசாங்கப் பாது காப்புத் துறை ஆராய்ச்சி நிறுவனத்தில் வேலைக்கு அமர்ந்தார். அங்கு 'ஹோவர்கிராஃப்ட்' எனப்படும் விமானத் தொழில் நுட்பத் துறையில் விமானத்தை உந்தித்தள்ளும் ஒரு விசேஷக் காற்றாடியை உருவாக்கும்



பணியில் ஈடுபட்டிருந்தார். அப்போது பெங்களூரில் 'இந்தியன் இன்ஸ்டியூட் ஆஃப் சைன்ஸ்' கல்லூரியில் இருந்த பேராசிரியர் சதீஷ் தவன் என்பவர் இந்தக் கலையில் தேர்ச்சிப் பெற்றிருந்ததை அறிந்து, அதற்கான தொழில் நுட்பங்களை அவரிடமிருந்துக் கற்றுக் கொள்ள திரு கலாம் விரும்பினார். பேராசிரியரை நேரில் சென்று சந்தித்து, தனது விருப்பத்தைத் தெரிவித்தார்.

ஒவ்வொரு சனிக்கிழமை அன்றும் தான் நடத்தும் வகுப்புக்கு வந்தால் ஆகாய விமான காற்றாடி செய்வதை கற்றுத் தருவதாக பேராசிரியர் கூறினார். அதற்கு திரு கலாமும் சம்மதித்தார். வகுப்புக்கு வருவதற்கு முன்பாகவே தொழில் நுட்ப விளக்கங்களை முழுவதுமாக திரு அப்துல் கலாமுக்குத் தந்து அவற்றைப் படித்துப் பார்த்துவிட்டு பிறகு தன் வகுப்புக்கு வருமாறு பணிக்க அவ்வாறே அவரும் மிகுந்த ஆர்வத்துடன் பேராசிரியர் தவன் சொன்னதைப் பின்பற்றினார். வகுப்பில் பாடம் தொடங்குவதற்கு முன்பாக பேராசிரியர் பல கேள்விகள் கேட்டு திரு அப்துல் கலாமை அவர் சோதனை செய்வார்.

இவ்வாறு ஆறே வாரங்களில் தனக்குத் தேவையானவற்றை எல்லாம் பேராசிரியரிடமிருந்து திரு கலாம் மிகுந்த ஆர்வத்துடன் கற்றுக் கொண்டு விட்டார். பிறகு அதே பேராசிரியருடன் விண்கல ஆராய்ச்சியில் சேர்ந்து ஒருங்கிணைந்து செயலாற்றி 'ரோஹினி' என்ற விண்கலத்தை வானில் செலுத்திய போது தனது நீண்ட நாள் கனவு நனவானதை உணர்ந்தார்.

நல்லொழுக்கங்களை தன் தந்தையிடமிருந்தும், கல்வி கற்கும் ஆர்வத்தை ஆசிரியர்களின் முன்னோடியாகத் திகழ்ந்த சிவசுப்பிரமணிய அய்யரிடம் இருந்தும், ஆராய்ச்சி அனுபவங்களை பேராசிரியர் சதிஷ் தவனிடமிருந்தும் தான் கற்றுக் கொண்டதை நினைவு கூரும் திரு அப்துல் கலாம், ஆசிரியர் என்பவர் மாணவர்களின் வாழ்வின் ஒளி விளக்கு என்றும் அந்த ஒளி விளக்குத் தன் சுடரால் பல விளக்குகளை ஏற்றுகிறது என்றும் உறுதியாக நம்புகிறார்.



*(2003ஆம் ஆண்டு ஆசிரியர்கள் தினத்தை ஒட்டி திரு அப்துல் கலாம் அவர்கள் நிகழ்த்திய உரையை ஆதாரமாகக் கொண்டது)*




# தாஜ்மகால்

சுமார் 350 ஆண்டுகளுக்கு முன் ஷாஜஹானால் கட்டப்பட்ட தாஜ்மகால் ஏழு உலக அதிசயங்களில் ஒன்றாகக் கருதப் படுகிறது. தாஜ்மகாலின் உயரம் 244 அடி இருந்தாலும், அதன் உயரமே தெரியாதவாறு அற்புதமாக அமைக்கப்பட்டுள்ளது. தாஜ்மகால் தோன்றுவதற்கு 400 ஆண்டுகள் முன்னரே எழுப்பப்பட்ட குதுப்மினார் பார்ப்பதற்கு மிக உயரமாகத் தோன்றி னாலும் அது தாஜ்மகாலை விட நான்கு அடிகள் உயரம் குறைவு. தாஜ்மகாலின் நான்கு பக்க சுவர்களிலும் புனித கு ரானின் வாசகங்கள் அராபிய மொழியில் பொறிக்கப் பட்டுள்ளன. மும்தாஜின் சமாதியைச் சுற்றியுள்ள திரை முதலில் தங்கத்தால் செய்யப்பட்டது எனினும் பின்னர் ஷாஜஹான் அதை பளிங்கினால் செய்த திரையாக மாற்றி விட்டார். அந்தப் பளிங்குத் திரையும் ஔரங்கசீப் காலத்தில் ராணுவச் செலவுகளுக்காக விற்கப்பட்டு வி ட்டது. இப்போது இருப்பது இலைகள் வடிவம் பொறிக்கப்பட்ட ஒரு சாதாரணத் திரை மட்டுமே.



# உலக சாதனை

இந்திய சுதந்திரத்திற்காக மகாத்மா காந்தி நடத்திய தண்டி யாத்திரை மிகவும் புகழ்பெற்றது. உலகில் நடந்த ஒத்துழையாமை இயக்கங்களிலேயே மிகவும் மகத்தான சாதனையாக இது கருதப் படுகிறது. காந்தியும் அவரது தொண்டர்களும் 1930ஆம் ஆண்டு மார்ச் 12ந் தேதி முதல் ஏப்ரல் 5ந் தேதி வரை 25 நாட்களுக்கு 388 கி.மீ தூரம் நடந்து இந்த சாதனையைப் படைத்தனர்.





# அநிருத்தரின் சோதிடம்

சனத்புரியில் அநிருத்தர் என்ற பிரபல சோதிடர் இருந்தார். தன்னிடம் வருபவர்களின் ஜாதகத்தைப் பார்த்து அவர்களது எதிர்காலத்தைக் கூறுவார். யாரிடம் ஜாதகம் இல்லையோ அவர்களுடைய நட்சத்திரம் அல்லது பிறந்த தேதியை கேட்டு அறிந்து கொண்டு, ஜாதகத்தைக் கணித்து எதிர்காலத்தைக் கூறுவார். பரிகாரம் என்ற பெயரில் பூஜைகளும், ஹோமங்களும் செய்து, தன்னிடம் வருபவர்களிடமிருந்து ஏராளமான பணத்தைக் கறந்து வாங்கிக் கொண்டார்.

அநிருத்தரின் அதிருஷ்டத்தினாலோ, என்னமோ அவர் கூறும் சோதிடம் பெரும்பாலும் பலித்து விடும். அப்படி பலிக்காவிட்டாலும், அதற்கு ஏதாவது அழகாக சமாதானம் கூறிவிடுவார்.

ஒருமுறை அவரது தூரத்து உறவினரான பாஸ்கரன் அவரைத் தற்செயலாக கடைத் தெருவில் சந்தித்தார். அநிருத்தரை நோக்கி பாஸ்கரன் கடுமையான குரலில், ''அநிருத்தா! என் மகளுடைய ஜாதகத்தைப் பார்த்து விட்டு அவளுக்கு இன்னும் ஆறு மாதத்தில் திருமணமாகி விடும் என்று நீ சொல்லி ஒரு வருடம் ஆகிவிட்டது. இன்னமும் என் பெண்ணுக்குத் திருமணம் ஆகவில்லை. நான் உன் உறவினனாக இருந்தும் என்னிடமிருந்து நிறையப் பணம் வேறு வாங்கினாய். உண்மையில் சொல்லப் போனால் உனக்கு சோதிடமே தெரியாது என்று தோன்றுகிறது'' என்று குற்றம் சாட்டினார்.

அநிருத்தரும் விடவில்லை. ''பாஸ்கரா! நாவை அடக்கிப் பேசு. என்னை யாரென நினைத்தாய்? காசி மகாப் பண்டிதரின் சிஷ்யன் நான். என்னுடைய சோதிடத்தையா மோசடி என்று கூறுகிறாய்?

– சங்கரன் –



உன்னுடைய பெண்ணின் ஜாதகமே தவறு என்று எண்ணுகிறேன்'' என்று அநிருத்தர் பதிலுக்கு சாடினார்.

அதற்கு பாஸ்கரன், ''என் பெண்ணின் ஜாதகத்தைக் கணித்தவனே நீதானே! மறந்து விட்டாயா?'' என்று கேட்க ''ஓஹோ! அப்படியானால் நீ கொடுத்த உன் மகளுடைய நட்சத்திரம் தவறாக இருக்கலாம். அல்லது பிறந்த நேரத்தை நீ தவறாகக் குறித்திருக்கலாம்'' என்று எகத்தாளமாகக் கூறிவிட்டு அநிருத்தர் சென்று விட்டார்.

அநிருத்தர் ஊர் மக்களை ஏமாற்றி பணம் சம்பாதிப்பது அந்த கிராமத்து ஜமீன்தாருக்குத் தெரிய வந்தது. அநிருத்தருக்கு தக்க தருணத்தில் ஒரு சரியான பாடம் புகட்ட ஜமீன்தார் எண்ணமிட்டுக் கொண்டிருந்தார். அந்த சமயம், ராஜாவின் பிரதிநிதி ஒருவர் ஜமீன்தாரிடம் வந்திருந்தார். அவரிடம் உரையாடிக் கொண்டு இருக்கையில் அநிருத்தரை பற்றிக் குறிப்பிட்ட ஜமீன்தார், ''இந்த மோசக்கார சோதிடர் இந்தக் கிராமத்து மக்களை மட்டுமன்றி பக்கத்து கிராமங்களிலுள்ள மக்களையும் ஏமாற்றி பணம் பறித்துக் கொண்டிருக்கிறார். இவருடைய முகத்திரையை கிழிக்க வேண்டும். எப்படிச் செய்வது என்று தான் புரியவில்லை'' என்றார். அதற்கு அந்த பிரதிநிதி முள்ளை முள்ளால்தான் எடுக்க வேண்டுமென்றும் அந்த சோதிடரின் மோசடியை வஞ்சகமான செயல் புரிந்துதான் வெளிப் படுத்த வேண்டும் என்று யோசனை கூறினார்.

மறுநாள் இரவு அநிருத்தரின் வீட்டில் திருட்டுப் போய் விட்டது. இந்தச் செய்தி ஊரில் காட்டுத் தீ போல் பரவியது. எல்லாருடைய எதிர் காலத்தையும் கூறவல்ல சோதிடர் தன் வீட்டிலே நடக்கப் போகும் திருட்டை எப்படி முன்கூட்டியே தெரிந்து கொள்ளாமல் விட்டார் என்று அனைவரும் ஆச்சரியம் அடைந்தனர்.

மறுநாளே ஜமீன்தார் அநிருத்தரைத் தன் வீட்டுக்கு வரவழைத்தார். அதிர்ச்சியில் மூழ்கியிருந்த அநிருத்தருக்கு ஜமீன்தாரின் அழைப்பு நம்பிக்கை தந்தது. திருடர்களைக் கண்டு பிடித்து தனது திருட்டு போன

பொருட்களை ஜமீன்தார் மீட்டு விட்டார் எனக் கருதி உற்சாகத்துடன் அநிருத்தர் ஜமீன்தாரிடம் சென்றார். அவர் ஜமீன்தார் வீட்டுக்குச் சென்ற சமயம், பல கிராமத்து ஜனங்களும் அங்கே கூடியிருந்தனர். அவர்கள் முன்னிலையில் ஜமீன்தார் அநிருத்தரை நோக்கி, எங்களுக்கெல்லாம் எதிர் காலத்தில் நடக்கப் போவதை அறிவிக்கும் நீங்கள், உங்கள் வீட்டில் நடக்கவிருந்த திருட்டை எப்படி முன்கூட்டியே சோதிடத்தின் மூலம் அறியாமல் இருந்தீர்கள்?'' என்று கேட்டார்.

எதிர்பாராத இந்தக் கேள்வியைக் கேட்டு திடுக்கிட்ட அநிருத்தர் சமாளித்துக் கொண்டு ''பிரபு, எனக்கு முன்னமே தெரியும். ஆனால் நடப்பது நடந்துதானே தீரும்! அதனால் என்னால் செய்யக்கூடியது ஒன்றும் இல்லை'' என்றார்.

உடனே ஜமீன்தார் கடுமையான குரலில், ''நீங்கள் இப்போது கூறுவது உண்மையானால், நீங்கள் இரண்டு குற்றங்கள் செய்திருக்கிறீர்கள். ஒன்று உங்களுக்குத் திருட்டைப் பற்றி முன் கூட்டியே தெரிந்திருந்தும் எனக்குத் தகவல் கொடுக்காமல் நீங்கள் உடந்தையாக இருந்திருக்கிறீர்கள். இரண்டாவது, நடப்பது நடந்துதான் தீரும் என்று நீங்கள் நம்புவதானால் மற்றவர்களை மட்டும் பரிகாரம் என்ற பெயரில் பூஜை, ஹோமம் செய்து பணம் பறித்து ஏமாற்றி இருக்கிறீர்கள். இல்லையா? '' என்று கேட்டார்.



அநிருத்தர் தலையைக் குனிந்து கொண்டே ஜமீன்தார் சொன்னதை ஆமோதித்தார். ஜமீன்தார் தொடர்ந்து ''சோதிடரே நேற்று என்னிடம் வந்திருந்த ராஜப்பிரதிநிதி சோதிடக் கலையில் வல்லவர். இந்த கிராமத்தில் நேற்றிரவு திருட்டு நடக்கப் போகிறது என்பதை சோதிடத்தில் கண்டு பிடித்து ஏற்கனவே காவலர்களை எச்சரிக்கை செய்திருந்தார். நேற்றிரவு அவர்கள் தெருக்களை சுற்றி வரும்போது, உன் வீட்டில் திரு டிய பொருட்களுடன் ஓடிய திருடர்கள் காவலர்களைக் கண்டு அஞ்சி அனைத்துப் பொருட் களையும் தெருவிலேயே விட்டு விட்டுச் சென்று விட்டனர்'' என்றார்.

''ஆகா, அப்படியானால் என்னு டைய பொருட்கள் கிடைத்து விட்டனவா? '' என்று குதூகலத் துடன் கேட்டார் சோதிடர்.

''ஆம், அவை இங்குதான் உள்ளன. அவற்றை நீ எடுத்துச் செல்லலாம். ஆனால் ஒரு நிபந் தனை. நீ இனிமேல் உன்னை சோதிடன் என்று கூறிக் கொள்ளாதே. மீண்டும் கிடைத்த பொருட்களைக் கொண்டு ஏதாவது வியாபாரம் செய்'' என்று ஜமீன்தார் கட்டளையிட்டார்.

''உங்களுடைய கட்டளையை நான் எப்படி மீற முடியும்? திருட்டுப் போன என் நகைகள் மீண்டும் கிடைத்ததே பெரிய பாக்கியம். இந்தக் கணத்திலிருந்து நான் சோதிடன் இல்லை என்று நான் சபதம் செய்கிறேன்'' என்றார் சோதிடர்.

பிறகு அங்கு கூடியிருந்த மக்களை நோக்கி ஜமீன்தார். ''உங்களுடைய மனப் போக்கை அறிந்த அநிருத்தர் போன்ற சோதிடர்கள் உங்களை ஏமாற்றிப் பணம் சம்பாதிக்கின்றர். பரிகாரங்கள் மூலம் தன் எதிர்கால இடர்களை சமாளிக்கலாம் என்ற மூட நம்பிக்கைகள் உள்ள வரை இது போன்ற ஆட்களும் தோன்றிக் கொண்டே இருப்பார்கள். இன்று அநிருத்தர் திருந்திவிட்டார். ஆனால் நாளை இன்னொரு அநிருத்தர் தோன்றலாம். நாம் தான் எச்சரிக்கை யாக இருக்க வேண்டும்'' என்று புத்தி மதி கூறி அனுப்பினார்.



# குழந்தைகளைப் பற்றிய செய்திகள்



## மராத்தன் நிகழ்ச்சியில் வெற்றி பெற்ற இந்திய மாணவர்

கலிஃபோர்னியாவிலுள்ள சான்ஜோஸ் உயர்நிலைப் பள்ளி மாணவரான, பதினைந்தே வயது நிரம்பிய கௌதம் பெரி பத்தொன்பது வயதுக்குட்பட்டவர்களுக்கான சான்பிரான்சிஸ்கோ கிரானிகிள் மராத்தன் பந்தயத்தில் பங்கேற்று நான்காவதாக வெற்றி பெற்றார். இந்த இந்திய மாணவர் 3 மணி நேரம், 46 நிமிடம் 47 வினாடிகளில் மராத்தன் பந்தயத்தின் குறிப்பிட்ட தூரத்தை ஓடி முடித்தார்.

கௌதமின் குடும்பத்தினர் ஹைதராபாதிலிருந்து அமெரிக்காவுக்குக் குடியேறினவர்கள். ஓட்டப் பந்தயங்களில் உற்சாகத்துடன் கலந்து கொள்ளும் கௌதம் தன் மராத்தன் சாதனையைப் பற்றிக் குறிப்பிடும் போது ''எனது சாதனை மன நிறைவு தருகிறது. 3 மணிநேரம் 15 நிமிடத்திலேயே ஓடி முடிக்கத் திட்டமிட்டேன். ஆனால் தனியாக20 மைல்கள் ஓடுவது மிகக் கடினமான காரியம். இயற்கை காட்சிகள் எனக்குத் துணையாக இருந்தது. இன்னும் இரண்டு ஆண்டுகளில் இதைவிட நன்றாகச் செய்வேன்'' என்றான்.

தனது தாய்மொழியான தெலுங்கில் ஆர்வமுள்ள கௌதம் அம்புலிமாமாவின் தெலுங்குப் பதிப்பை தவறாமல் படிக்கிறான்.

## ஸ்பெல்லிங் சாம்பியன்

வாஷிங்டனில் கடந்த ஜூன் மாதம் நடந்த 77வது நேஷ்னல் ஸ்பெல்லிங் பீ என்னும் ஆங்கிலச் சொற்களின் எழுத்துக்களை சரியாகச் சொல்லும் போட்டியில் கொலராடோவைச் சேர்ந்த அக்ஷய புத்திகா என்ற இந்தியச் சிறுவன் இரண்டாவது இடத்தைப் பெற்றான். ஒரேயொரு ஆங்கில வார்த்தைக்கு மட்டும் ஸ்பெல்லிங் சொல்லத் தடுமாறியதால், 14 வயது நிரம்பிய டேவிட் டிட்மருக்கு முதற்பரிசு கிடைத்தது. கிடைத்த பரிசுத் தொகை 12,000 அமெரிக்க டாலர்கள் அதாவது 6 லட்ச ரூபாய்.



2002ம் ஆண்டு நடந்த இந்தப் போட்டியில் அக்ஷயின் அண்ணன் பிரத்யுஷ் முதற்பரிசைப் பெற்றிருக்கிறான்.

# செய்திச்சுடர்

## யானைக்கு மரியாதை




**ஆ**ஸ்கார் பரிசு, நோபல் பரிசு, புலிட்சர் பரிசு ஆகிய சர்வதேசிய பரிசுகளைப் பற்றியும் நமது நாட்டில் வழங்கப்படும் ஞான்பீட் பரிசு, பத்மஸ்ரீ ஆகிய விருது களைப் பற்றி நாம் எல்லாரும் கேள்விப் பட்டிருக்கிறோம். ஆனால் ஒரு யானைக்கு விருது கிடைத்திருப்பதை அறிவீர்களா? கேரள மாநிலத்து குருவாயூர் கிருஷ்ணர் கோயிலில், பத்மநாபன் என்ற பெயர் கொண்ட யானை உள்ளது. அங்குள்ள சுமார் எழுபது யானைகளில் பத்மநாபன் மிகப் புகழ் பெற்ற யானையாகும்.

பத்மநாபன் குருவாயூர் கோயிலுக்கு ஐம்பது ஆண்டுகளாகத் தொடர்ந்து பணியாற்றியதைப் பாராட்டி அதற்கு கஜரத்னா என்ற விருது வழங்கப்பட்டது. இந்த பட்டமளிப்பு விழாவில் பத்மநாபன் முன்னணியில் செல்ல சுமார் 60 யானைகள் கொண்ட ஒரு பிரம்மாண்டமான ஊர்வலம் மம்மியூர் கோயிலிலிருந்து கிளம்பி குருவாயூர் கோயிலை அடைந்தது. பத்மநாபனை பூரண கும்ப மரியாதைகளுடன் கோயில் நிர்வாகத்தினர் கௌரவித்து அதற்கு பட்டம் வழங்கினர்.

1954ஆம் ஆண்டு ஜனவரி 18ந் தேதி பத்மநாபன் குருவாயூருக்குப் பரிசாகக் கொடுக்கப்பட்டது. அந்த சமயம் அதன் வயது 14. தன்னுடையஉருவத்தாலும் தன்னுடைய செயல்களாலும், பத்மநாபன் அனைவரையும் வெகுசீக்கிரத்தில் கவர்ந்து விட்டது.

சமீபத்தில் மற்றொரு கோயில் திருவிழாவிற்காக அந்தக் கோயில் நிர்வாகத்தினர் பத்மநாபனை விரும்பினர். அதற்கான வாடகைப் பணமாக குருவாயூர் கோயிலுக்குக் கொடுத்த தொகை எத்த னை தெரியுமா? 2,22,222 ரூபாய். ஒரு யானையை வாடகைக்கு எடுத்துக் கொள்ளப்பட்ட தொகைகளில், மிக அதிகத் தொகை இது தான்.

## கேரள நாட்டுப்புறக் கதை

# அதிசயத் திருடன்

பணக்காரர்களைக் கொள்ளை அடித்து ஏழைகளுக்கு உதவி புரிந்த ராபின்ஹுட் என்ற கதாநாயகனைப் பற்றி கேள்விப் பட்டிருப்பீர்கள். கேரள மாநிலத்தில் அதே போன்ற ஓர் அதிசயத் திருடன் நிஜமாகவே இருந்ததுண்டு. கொச்சுண்ணி என்ற பெயர் கொண்ட அந்தத் திருடன் ஏழைகளை வஞ்சித்து பணம் பறிக்கும் செல்வந்தர்களைக் கொள்ளையடித்து வந்தான். ஆனால் இவ்வாறு திருடிய பணத்தை தனக்கு என்று பயன்படுத்தாமல் அதைக் கொண்டு ஏழைகளுக்கு உதவி வந்தான். இதனால் ஏழைகள் அவனிடம் நட்புரிமை பாராட்டிய போதிலும் அவன் பெயரான 'காயம் குளம் கொச்சுண்ணி' என்பதைக் கேட்டவுடனேயே பண்காரர்களுக்கு குலைநடுக்கம் ஏற்பட்டது.



காயங்குளம் என்ற ஊரில் ஏழைகளுக்கு வட்டிக்குப் பணம் கொடுக்கும் ஒரு ஜமீன்தார் இருந்தார். தங்க நகை முதலிய ஆபரணங்களை அடமானமாகப் பெற்றுக் கொண்டு மிக அதிக வட்டிக்குப் பணம் கடன் கொடுப்பது அவர் வழக்கமாக இருந்தது. பெரும்பாலானவர்கள் அசலை குறித்த தவணையில் செலுத்த முடியாது தவிக்கையில், அவர்களது அடமானப் பொருட் களை ஜமீன்தார் தன்னுடையதாக்கிக் கொள்வார். இவ்வாறு சேர்த்த செல்வத்தினால் அவர் பெரிய மாளிகையே கட்டி விட்டார்.

அந்த மாளிகையில் இரட்டைச் சுவர்களை அமைத்து தன் இருப் பிடத்தை உறுதியாகவும் பத்திரமான தாகவும் ரகசிய அறைகள் அடங்கிய

தாகவும் ஏற்படுத்திக் கொண்டார். இவ்வளவு பந்தோபஸ்து எதற்கு என்று நண்பர்கள் யாராவது கேட்டால் ''கொச்சுண்ணி திருட முயற்சித்தால் என்னிடமுள்ள அடமானப் பொருட் களை நான் எப்படி பத்திரமாக பாதுகாக்க முடியும்? ஆகவே தான் என் வீட்டை ஒரு மர்மக் கோட்டை ஆக்கிவிட்டேன். இப்போது பத்து கொச்சுண்ணிகள் வந்தாலும் திருட முடியாது'' என்று பெருமை பேசினார்.

அவரது இந்த வாய் சவால் கொச்சுண்ணியின் செவிகளை எட்டியது. ஜமீன்தாருக்கு ஒரு பாடம் கற்பிக்க முடிவு செய்த கொச்சுண்ணி ஒருநாள் நேராக ஜமீன்தாரை சந்தித்து பணம் கடன் கேட்டான். அவர் தராவிட்டால் அவரது வீட்டில் புகுந்து திருடலாம் என்று எண்ணினான். ஆனால் ஜமீன்தார் உடனே கடன் கொடுத்து விட்டார். கொச்சுண்ணியால் தன் வீட்டில் திருட முடியாது என்று சவால் விட்ட ஜமீன்தாரை, இப்போது வேறு வழியில் கொச்சுண்ணி மடக்க எண்ணினான்.

கிருஷ்ணன் நாயர் என்பவன் தனது நகைகளை ஒரு முறை ஜமீன்தாரிடம் அடகு வைத்து ஆயிரம் ரூபாய் கடன் வாங்கினான். இதை அறிந்த கொச்சுண்ணி ஒரு நாள் இரவு ஜமீன்தாரின் வீட்டை அடைந்தான். ஜமீன்தாரின் தினசரி நடவடிக்கை களை நன்கு அறிந்திருந்த கொச் சுண்ணிக்கு முன் இரவு நேரத்தில்



ஜமீன்தார் என்ன செய்வார் என்பது தெரிந்திருந்தது.

ஜமீன்தார் உடலில் எண்ணெய் தேய்த்துக் கொண்டு, தன் வீட்டி லுள்ள சிறிய குளத்தில் குளிப் பதற்குத் தயாராக இருந்தார். இதுதான் சமயம் என்று வீட்டிலுள்ள கொச்சுண்ணி வீட்டின் முன்புறம் மறைவாக நின்று கொண்டு, ஜமீன் தாரது மனைவியை அழைத்து, ''கிருஷ்ணன் நாயர் வந்திருக்கிறான். அவனிடமிருந்து பணத்தைப் பெற்றுக் கொண்டு அவன் அடகு வைத்திருந்த நகைகளை திருப்பிக் கொடு'' என்று ஜமீன்தாருடைய குரலில் பேசினான். தன் கணவர் தான் தோட்டத்திலிருந்தபடியே பேசுகிறார் என்று நம்பிவிட்ட ஜமீன்தார்



மனைவி அடகு நகைகளை எடுத்துக் கொண்டு வெளியே வந்தாள். அங்கு நின்றிருந்த கொச்சுண்ணியின் கையிலிருந்து பணப்பையைப் பெற்றுக் கொண்டு நகைகளைக் கொடுத்து விட்டாள். கொச்சுண்ணியும் நகைகளுடன் சென்று விட்டான். இது குளத்தில் குளித்துக் கொண்டிருந்த ஜமீன்தாருக்குத் தெரியாது.

சில நாள்கள் கழித்து கிருஷ்ணன் நாயர் ஜமீன்தாரிடம் வந்து தான் வாங்கிய கடனை திருப்பிக் கொடுத்து அடகு வைத்த நகைகளைக் கேட்டான். பணத்தைப் பெற்றுக் கொண்டு உள்ளே நகைகளைத் தேடிய ஜமீன்தாருக்கு அவற்றைக் காணாததால் அதிர்ச்சி ஏற்பட்டது. உடனே தன் மனைவியைக் கூப்பிட்டு விசாரித்தார். அவள், ''உங்களுக்கு மறந்து விட்டதா? நீங்கள் தானே சில நாள்களுக்கு முன் கிருஷ்ணன் நாயர் வந்திருந்த போது அவருடைய பணத்தைப் பெற்றுக் கொண்டு நகைகளைத் திருப்பிக் கொடுக்கச் சொன்னீர்கள்!'' என்றாள்.

''அப்படியா, அந்தப் பணம் எங்கே?'' என்று ஜமீன்தார் கேட்டார். அவளும் கொச்சுண்ணி தந்த சிவப்பு நிற பணப்பையைக் கொண்டு வந்தாள். அதைத் திறந்து பார்த்தால் உள்ளே பணமேஇல்லை.

பெருத்த அதிர்ச்சியுற்ற ஜமீன்தார் கிருஷ்ணன் நாயரிடம் நிலைமையை விளக்கித் தன்னை மன்னிக்கும்படிக் கேட்டுக் கொண்டார். நகைகளுக்கு பதிலாக அதற்குச் சமமான மதிப்பு உள்ள பணம் கொடுத்து அவனை அனுப்பினார்.

ஜமீன்தாரும் அவரது மனைவியும் தாங்கள் ஏமாற்றப் பட்டு விட்டதை உணர்ந்தனர். ஜமீன்தார் தன் மனைவியிடம் ''அன்று வந்த ஆள் எப்படி இருந்தான்?'' என்று கேட்க ''நான் உன்னிப்பாக கவனிக்கவில்லை. நீங்களே கொடுக்கச் சொன்னதால் தான் வந்திருப்பது கிருஷ்ணன் நாயர் என்று நினைத்தேன்'' என்றாள்.

''ஆகா! இது கொச்சுண்ணியின் வேலையா!'' என்ற எண்ணம் தோன்றவே ஜமீன்தாருக்கு அதிர்ச்சியுடன் பயமும் ஏற்பட்டது. தன்னுடைய குரலில் பேசி தன் மனைவியை ஏமாற்றி விட்டானே, இன்னும் என்னவெல்லாம் செய்வானோ என்ற பயம் வந்தது.

இப்படி சோகக் கடலில் மூழ்கி இருந்த இருவரையும் நோக்கி சில

மணிநேரங்களில் கொச்சுண்ணியே வந்தான் என்றால் அவர்களுக்கு எப்படி இருந்திருக்கும்? செய் வதையும் செய்து விட்டு ஒன்றும் அறியாதவன் போல், ''ஏன் இப்படி இருவரும் கவலையாக இருக்கி றீர்கள்? '' என்றான் கொச்சுண்ணி. ஜமீன்தாரால் பேசவே முடிய வில்லை. அவர் மனைவி நடந்ததை சொன்னாள்.

அவள் சொன்னதைக் கேட்டு கடகடவென சிரித்த கொச்சுண்ணி ஒரு பையை நீட்டி ''இதோ அந்த நகைகள். சரியாக இருக்கிறதா என்று பாருங்கள்'' என்றானே பார்க்கலாம். பிறகு தொடர்ந்து ''கிருஷ்ணன் நாயரைக் கூப்பிட்டு அவனுக்கு நகைகளைக் கொடுத்துவிட்டு உங்கள் பணத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள். என்னமோ, பத்து கொச்சுண்ணிகள் வந்தாலும் உங்கள் வீட்டில் திருட முடியாது என்று சவடால் அடித் தீர்களல்லவா? அதற்காகத்தான் இப்படிச் செய்தேன்'' என்று கொச் சுண்ணி பதில் கூறினான்.

இந்நிகழ்ச்சிக்குப் பின் ஜமீன்தார் நல்லவராக திருந்தி விட்டார் என்று கொச்சுண்ணி கேள்விப்பட்டிருந் தான். ஆகவே அதன் பிறகு கொச்சுண்ணி ஜமீன்தாருக்கு இடைஞ்சல் எதுவும் செய்ய வில்லை.

அந்த ஊரில் கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்த ஒரு கொப்பரை வியாபாரி இருந்தான். அவன் வியாபாரம் சரிவர நடைபெற வில்லை. அடிக்கடி அதிக வட்டிக்குப் பணம் வாங்கி ஏகப்பட்ட சிக்கலில் மூழ்கி இருந்தான். இவ்வாறு வியாபாரத்தில் தத்தளித்துக் கொண்டிருந்த போதும், என்றாவது நல்ல காலம் பிறக்கும் என்ற நம்பிக்கையில் அவன் நாள்களை ஓட்டி வந்தான்.

ஒருநாள் அவன் கொப்பரை தேங்காய்களை ஆலப்புழைக்குச் சென்று விற்றுவிட்டு, எதிர்பார்த்த விலையில் விற்பனை ஆகவில்லை என்பதனால் வருத்தத்துடன் தனது ஊர் நோக்கிச் செல்லும் படகில் அமர்ந்து இருந்தான். திடீரென அவர்கள் பின் பக்கத்திலிருந்து ஒரு விசைப்படகு வேகமாக வந்தது. அதிலிருந்து ஒருவன், வியாபாரி சென்று கொண்டிருந்த படகுக்குத் தாவியேறினான். அது கொச்சுண்ணி என்று அறிந்தவுடன் வியாபாரி பயந்து நடுங்கினான்.

கொச்சுண்ணி வியாபாரியை யாரென்று கேட்டான். வியாபாரி, ''நான் கொப்பரை தேங்காய் விற்பவன். ஆலப்புழையிலிருந்து திரும்பி வருகிறேன்'' என்றான்.



''தேங்காய் வியாபாரியா நீ? அப்படியானால் உன்னிடம் அதிகப் பணம் இருக்கும். அதை இப்போதே என்னிடம் கொடுத்து விடு'' என்று கொச்சுண்ணி கட்டளையிட்டான்.

''ஐயா, நான் ஓர் ஏழை வியாபாரி. என்னை விட்டு விடுங்கள்'' என்று வியாபாரி கெஞ்சினான். ''நான் யார் தெரியுமா? நான்தான் கொச்சுண்ணி. நான் சொல்கிறபடி செய்,'' என்று கொச்சுண்ணி அதிகாரம் செய்தான். வேறு வழியின்றி தன்னிடமுள்ள பணம் இருநூற்று ஐம்பது ரூபாயை வியாபாரி கொச்சுண்ணியிடம் தந்து விட்டான். கொச்சுண்ணி மீண்டும் தன் படகில் ஏறிச் சென்று விட்டான்.

வீட்டுக்கு வந்ததும் வியாபாரி நடந்ததைத் தன் மனைவியிடம் சொல்ல, அவள் மனமுடைந்து அழுதாள். ''இப்போது பணத்துக்கு என்ன செய்வது? நமது வீட்டை விற்று விடலாம். அதில் கிடைக்கும் பணத்தில் மீண்டும் வியாபாரம் செய்யலாமா? '' என்று மனைவி கேட்க, வியாபாரிக்கும் அதைத் தவிர வேறு வழி தெரியவில்லை.

ஆனால் வீட்டை விற்க முயற்சித்த வியாபாரிக்கு ஏமாற்றமே ஏற்பட்டது. அவன் எதிர்பார்த்த விலைக்கு வீடு விற்பனையாக வில்லை. இவ்வாறு பலவிதமான சோதனைகளுக்கும் ஆளான வியாபாரியின் வீடு தேடி ஒருநாள் கொச்சுண்ணியே வந்து விட்டான். ''வியாபாரியே, பயப்படாதே! உன்னை நான் தொந்தரவு செய்ய மாட்டேன். உன்னுடைய பணத்தைத் திருப்பிக் கொடுக்கவே நான் வந்துள்ளேன். உன்னிடமிருந்து பணத்தைக் கைப்பற்றிய அன்றே நீ ஓர் ஏழை வியாபாரிதான் என்று தெரிந்து விட்டது. அன்று எனக்குப் பணம் தேவையாயிருந்ததால் உன்னிடம் இருந்து பலவந்தமாகப் பணத்தை எடுத்துக் கொண்டேன். அதற்காக வருந்துகிறேன். எடுத்துக் கொள் உன் பணத்தை'' என்று சொல்லிவிட்டு கொச்சுண்ணி சென்று விட்டான்.

அந்த பணப்பை பயில் அன்று கொச்சுண்ணி எடுத்துக் கொண்டதைக் காட்டிலும் நான்கு மடங்கு அதிகப் பணம் இருந்தது. கொச்சுண்ணியின் இரக்க குணத்தை அறிந்து உணர்ச்சி வசப்பட்ட வியாபாரி, ''கடவுளே கொச்சுண்ணியின் நல்ல மனதிற்காக அவனை நீண்ட காலம் வாழச் செய்யுங்கள்'' என்று பிரார்த்தனை செய்தான்.



# ராமுவின் தந்திரம்

ஒரு கிராமத்தில் தனகோடி என்ற ஜமீன்தார் இருந்தார். அந்த கிராமத்தில் நிலங்களுக்கான வரி, வட்டி ஆகியவற்றை வசூலிக்க சிலஅதிகாரிகளை அவர் நியமித்திருந்தார். அவர்களில் சோமன் என்ற அதிகாரி அனைவரிடமும் லஞ்சம் வாங்கிப் பிழைத்தான். அவனது நடவடிக்கைகளைக் கேள்விப்பட்டு கோபமடைந்த தனகோடி, சோமனை ஒரு கிராமத்திற்கு அனுப்பிவிட்டார். ஆனால் அங்கும் சோமன் லஞ்சம் வாங்குவதைத் தொடர்ந்து நடத்திவந்தான்.

ஒரு சமயம் அந்த கிராமத்தில் ராமு என்பவனுக்கு தன்னுடைய தம்பியின் நிலத்தின் பட்டாவில் கொஞ்சம் பிரச்சினை இருந்தது. அந்தப் பட்டாவுக்கு சோமன் ஒப்புதல் தேவைப் பட்டது. சோமனைப் பற்றி அறிந்திருந்த ராமு ஒரு நாள் சோமன் இல்லாதபோது அவனது அலுவலக மேசையில் ஒரு தங்க நாணயத்தை வைத்து விட்டுத் திரும்பி விட்டான். திரும்பி வரும் போது, சோமன் அலுவலகத்திற்கு சென்று கொண்டிருந்ததைப் பார்த்தான். சோமனிடம் ''ஐயா, என் தம்பி உங்கள் அலுவலகத்தில் உங்களுக்காகக் காத்திருந்தான் நீங்கள் தாமதமாக வந்ததால், வேறு வேலையாகச் சென்று விட்டான். நீங்கள் அந்தப் பட்டாவுக்கு ஒப்புதல் அளியுங்கள்'' என்றான்.

ஒரு வாரமாகியும் பட்டா வேலை நடைபெறாததால் ராமு சோமனிடம் அதைப்பற்றி கேட்டான். அதற்கு ''உன் தம்பி முன்பு வந்தது போல் பலமுறை என் அலுவலகத்திற்கு வந்தால்தான் வேலை நடக்கும்'' என்றான். ''என் தம்பி இப்போது ஜமீன்தாரிடம் வேலை செய்கிறான். இந்த வேலையை செய்து முடிக்க எவ்வளவு பணம் தேவை என்று தெரிந்து கொள் ள விரும்புகிறான்'' என்றான் ராமு. அதைக் கேட்ட சோமன் பெரும் அதிர்ச்சியடைந்தான். உடனே, ''பட்டா முன்னமே தயாராகிவிட்டது. நீ எடுத்துச் செல்லலாம்'' என்றான்.

-ராஜேஷ் அவஸ்தீ



# கர்வ பங்கம்

**த**ன்னுடைய மதத்தில் தீவிரப் பற்று வைத்திருந்த ஒரு அறிஞர் தான் செல்லும் இடங்களில் எல்லாம் தன்னுடைய மதத்தின் சிறப்பியல்புகளைப் பற்றி பெருமையாகப் பிரசாரம் செய்து கொண்டே இருந்தார். அவருடைய பிரசாரம் செய்யும் திறமையைக் கண்டு வியந்த அவருடைய நாட்டு மன்னன், அவருக்கு ஒரு கப்பலும் உதவிக்கு ஆட்களும் கொடுத்து வெகு தொலைவிலுள்ள நாடுகளுக்கெல்லாம் சென்று பிரசாரம் செய்ய உதவி செய்தான். அந்த அறிஞரும் கடல் பயணம் செய்து பல இடங்களுக் கும் சென்று மதபோதனை செய்து வந்தார்.

ஒருமுறை கப் பலில் பயணம் செய்யும்போது கப்பலின் தலைவன், அவரிடம் கடலில் தொலைவில் தென்பட்ட ஒரு தீவைக் காட்டி ''குருவே, அந்தத் தீவில் மூன்று மனிதர்கள் மட்டுமே உள்ளனர். அவர்களை நான் பார்த்திருக்கிறேன். எந்த நேரமும் அமைதியாக அமர்ந்து இறைவனை தியானம் செய்து கொண்டே இருப்பார்கள்'' என்றான்.

''அப்படியானால் அவர்களை சந்திப்போம். கப்பலை அந்தத் தீவுக்குச் செலுத்துங்கள்'' என்றார் அந்த அறிஞர். அவ்வாறே கப்பலும் அந்தத் தீவினை அடைந்தது.

மிகக் குறைந்த பழைய கிழிந்த ஆடைகளுடனும், வெளுத்த தாடியுடனும் மூவர் அந்தத் தீவில் கப்பலைப் பார்த்துக் கொண்டே நின்று கொண்டிருந்தனர். அவர்களைக் கண்டு அந்த அறிஞர் அவர்கள் பேரில் இரக்கம் கொண்டார். ''கடவுளுடைய கருணையினால் என் உதவி அவர்களுக்குக் கிடைக்க உள்ளது. இறைவனை வணங்குவது எப்படி என்று நான் அவர்களுக்குக் கற்றுத் தரவே இறைவன் என்னை இங்கே அனுப்பி உள்ளார்'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டார். ''நண்பர்



களே! கடவுள் உங்களுக்கு கருணை காட்டுகிறார் என நம்புகிறேன்'' என்றார்.

அந்த அறிஞர் கூறியதைக் கேட்டு அர்த்தம் புரி யாதவர்கள் போல் அவர்கள் விழிக்க, அறிஞர் மீண்டும் தன் வார்த்தைகளைத் திருப்பிச் சொன்னார். பிறகு அவர்களில் ஒருவர் கடவுள் எப்போதுமே கருணை உள்ளவர் தான் என்றும் அதில் ஆச்சரியப்பட ஒன்றுமில்லை என்றும் கூறினார்.

பிறகு அந்த அறிஞர் தான் வந்த வேலையைத் தொடங்க விரும்பி, ''நண்பர்களே, கடவுளை என்ன சொல்லி வணங்குகிறீர்கள்? எப்படி வணங்குகிறீர்கள்?'' என்று கேட்டார்.

மறுபடியும் மூவரும் சரிவர பதில் சொல்லாமல் விழித்தனர். பலமுறை கேட்ட பிறகு அந்த அறிஞருக்கு அவர்கள் சொல்லும் இறைவணக்கம், ''நீங்களும், நானும் கடவுளே'' என்ற வாக்கியம் என்பது புரிந்தது.

''அவ்வளவுதானா! இப்படியா இறைவணக்கம் செய்வது? இப்படியா பிரார்த்தனை செய்வது? பிரார்த்தனை எப்படி முறையாகச் செய்வது என்று நான் கற்றுத் தருகிறேன்'' என்றார் அந்த அறிஞர். பிறகு தியானம் செய்ய தரையில் அமரும் விதமும் கைகளை மேலே தூக்கி ஏராளமான வார்த்தைகளைக் கொண்ட பிரார்த்தனை செய்யும் விதத்தைப் பொறுமையாகக் கற்றுக் கொடுத்தார். அதன்பிறகு ஒரு நல்ல காரியம் செய்துவிட்ட திருப்தியுடன்



கப்பலுக்குச் சென்றார். கப்பல் கடலில் கிளம்பியவுடன், அந்த அறிஞர் கப்பல் தலைவனிடம் ''தான் அடைய வேண்டிய இடத்தின் வழி சரியாகத் தெரியாவிட்டால் கடலி லேயே பயணம் செய்ய வேண்டியது தான்'' என்று தன் போதனையைப் பற்றிப் பெருமை பேசினார்.

''ஆமாம் குருவே அவர்கள் இப்படியே இறைவணக்கம் செய்து பயனில்லாமல் காலத்தை வீணாக்கி இருப்பார்கள். நீங்கள் பிரார்த்தனை பற்றி நன்றாகக் கற்றுக் கொடுத் தீர்கள்'' என்று கப்பல் தலைவனும் அவரைப் புகழ்ந்தான்.

இவ்வாறு அவர்கள் பேசிக் கொண்டிருக்கையில் மாலை மங்கி இரவு நேரம் வந்தது. திடீரெனக் கடலில் புயற்சின்னங்கள் தோன்றின. அன்று இரவே, அதிவேகத்தில் புயல் அடிக்கத் தொடங்கி கடல் கொந் தளித்தது. கப்பல் பேயாட்டம் ஆடத்



யைப் பற்றி அறிஞர் கற்றுக் கொடுத்தாரோ அந்த மூவரும் தான் அவர்கள். அவர்கள் வந்த இடம் மட்டு ம் புயல் இல்லாம் மலிருக்க, அவர் களைச் சுற்றி ஒளிவீச அவர்கள் மூவரும் தண்ணீரில் கால் வைத்து ஓடி வந்துக் கொண்டிருக்கும் மிக மிக அதிசயக் காட்சி தெரிந்தது.

தொடங்கி எந்த நிமிடம் கவிழுமோ என்ற ஆபத்தான சூழ்நிலை உண்டா யிற்று.

நம்பிக்கை இழந்து மனங்கலங்கிய கப்பல் தலைவன் அறிஞரிடம் வந்து, ''குருவே, தயவு செய்து கடவுளை நோக்கி பிரார்த்தனை செய்யுங்கள். உங்கள் பிரார்த்தனை மட்டுமே நம்மைக் காப்பாற்ற முடியும்'' என்று கெஞ்சினான்.

முதன் முதலாக தனது பிரார்த்தனை தங்களைக் காப்பாற்றுமா என்ற சந்தேகம் அந்த அறிஞருக்கு உண்டா யிற்று. இருந்தாலும் அறிஞர் கப்பலின் மேல் தளத்திற்கு வந்து பிரார்த்தனை செய்ய ஆரம்பித்தார்.

கடலின் கிழக்குப் பகுதியில் மட்டும் புயல் அடங்கிஇருந்தது. அது மட்டுமின்றி மழையும் அந்தத் திசையில் நின்றுவிட, கடலும் அமைதியாக இருக்க கடலில் மூன்று உருவங்கள் கடல்நீர் மீது கால் வைத்து கப்பலை நோக்கி ஓடி வந்து கொண்டி ருந்தனர். என்ன அதிசயம்! எந்தத் தீவில் உள்ள மூவருக்கு பிரார்த்தனை

''ஐயா, நீங்கள் கற்றுக் கொடுத்த பிரார்த்தனை மறந்து விட்டது. மீண்டும் கற்றுக் கொடுக்கிறீர்களா?'' என்று மூவரும் அறிஞரை நோக்கிக் கேட்டனர். ''உணர்ச்சி வசப்பட்ட அறிஞர் அவர்களை நோக்கி மண்டி யிட்டு, ''கடவுளின் குழந்தைகளே! உங்களுக்குப் பிரார்த்தனை கற்றுக் கொடுக்க நினைத்த இந்த மூடனை மன்னித்து விடுங்கள்'' என்று கதறினார்.

''நன்றி'' என்று சொல்லிவிட்டு மூவரும் பழையபடியே கடல்மீது நடந்தே திரும்பிச் சென்றனர்.

ஆனால் அந்த அறிஞரோ கீழே புரண்டு அழத் தொடங்கினார். பாமரர்கள் என்று எண்ணி யாருக்கு பிரார்த்தனை மூலம் கடவுளைக் காட்ட முனைந்தாரோ, அந்தப் பாமரர்கள் தான் கடவுளுடனே வசிக்கும் உண்மையான பக்தர்கள் என்று புரிந்து கொண்டு, தன் இறுமாப்பை எண்ணி அழுதார்.



# மகாவிஷ்ணு

தசரதர் புத்திரகாமேஷ்டியாகம் செய்யவே ஹோமகுண்டத்திலிருந்து அக்னிதேவன் ஒரு பாத்திரத்தில் பாயசத்தோடு வெளி வந்தார். அவர் அப்பாயசத்தை தசரதரிடம் கொடுத்து அதனை அவரது மனைவிகளுக்குக் கொடுத்தால் புத்திரசந்தானம் ஏற்படும் எனக் கூறி மறைந்தார்.

தசரதரும் அப்பாயசத்தை கோசலைக்கும் கைகேயிக்கும் பகிர்ந்து கொடுத்தார். அவர்கள் இருவரும் சுமித்திரைக்கு மன்னர் பாயசம் கொடுக்கவில்லையே என எண்ணித் தமக்குக் கிடைத்ததில் பாதிப் பாதிப் பாயசத்தை அவளுக்குத் தனித் தனியே கொடுத்து விட்டுத் தாமும் சாப்பிட்டார்கள். கௌசல்யை சித்திரை மாதத்தில் சுக்கில பட்ச நவமி திதியில் மகாவிஷ்ணுவின் அவதாரமாக இராமரை நீலமேக வண்ணத்தில் பெற்றெடுத்தாள். கைகேயி விஷ்ணுவின் சங்கபத்ம அம்சத்தின் அவதாரமாகப் பரதனைப் பெற்றாள். சேஷனின் அம்சமான இலட்சுமணனையும் சக்கரம், கதை ஆகியவற்றின் அம்சமான சத்துருக் கனையும் சுமித்திரை பெற்றாள்.

இராமர் பிறந்த நாளை இராம நவமியாக கோசல நாடு முழுவதிலும் கொண்டாடினார்கள். அதன் பிறகு வந்த சித்திரை பௌர்ணமி இரவில் அரண்மனை மேல் தளத்தில் தசரதர் தம் நான்கு மைந்தர்களுடனும் மூன்று மனைவிகளோடும் அமைச்சர் சுமந்திரரோடும் அமர்ந்திருந்தார். இராமரைத் தூக்கி பத்திரன் என்ற வேலையாள் விளையாட்டு காட்டிக் கொண்டிருந்தான்.



வசிஷ்டரும் ''இராமா! நீ சூரியவம்சத்தவன். சூரியனைப் போலவே உலகெங்கும் ஒளி வீசிப் புகழ் பெறுவாய். உன் முன்னோர் களான ரகு, திலீபன் போல உயர்ந்து விளங்குவாய்'' என ஆசீர்வதித்தார்.

இவ்வாறு சூதர் கூறவே நைமி சாரண்யா முதலான முனிவர்கள் ''சூரியவம்ச மன்னர்களைப் பற்றி சற்று விவரமாகக் கூறுங்கள்'' எனக் கேட்கவே சூதரும் கூறலானார்.

மகாகல்ப காலத்தில் விவஸ் வந்தன் என்ற பெயரில் பிரகாசித்த சூரியனின் மகன் வைவஸ்வத மனு என்ற பெயர் பெற்றார். இவருக்கு பத்து மைந்தர்கள். அவர்களில இஷ்வாகு என்பவன் ஒருவன்.

இந்த இஷ்வாகு வம்சத்தில் பிறந்தவர்கள் சிறந்த மன்னர்களே. இவர்களில் திலீபனும் ரகுவும் மிகவும் புகழ் பெற்றவர்கள்.

திலீபன் புத்திரப் பேறு பெற குல குரு வசிஷ்டரின் கட்டளைப்படி காமதேனுவின் அம்சமான நந்தினி யைப் போஷித்து காட்டில் கொண்டு போய் மேய்த்து அதனை பூசித்து வரலானான். ஒரு நாள் அது ஒரு குகைக்குள் போய் விட்டது. அக்குகையில் ஒரு பயங்கர சிங்கம் இருந்தது. அது நந்தினியைப் பிடித்துக் கொள்ளவே திலீபன் அச்சிங்கத்தை கொல்ல வில்லையும் அம்பையும் எடுத்துக் கொண்டான். ஆனால் அவனால் அம்பை எய்ய முடியாமல் கை செயலற்றுப் போயிற்று.

இராமர் தன் தாயாரிடம் போகவே அவளும் அவருக்கு ஆகாயத்திலிருந்த சந்திரனைக் காட்டினாள். இராமரோ தனக்கு அந்த நிலா வேண்டுமென்று பிடிவாதம் பிடித்தார். சுமந்திரர் உடனே முகம் பார்க்கும் கண்ணாடி யை எடுத்து வந்து ''ராமா! சந்திரனைப் பார்'' என அதில் காட்டினார். இராமரும் மகிழ்ந்து ''ஓ! இராமன் சந்திரன்'' எனக் கூவினார். அன்று முதல் இராமச் சந்திரன் எனவும் அவர் அழைக்கப் பெற்றார்.

இலட்சுமணன் எப்போதும் இராமருடன் இருந்து வந்தான். அது போல பரதனும் சத்துருகனனும் ஒன்றாக இருந்தனர். அவர்கள் வசிஷ்டரிடம் கல்வி பயின்றனர். சிறு வயதிலேயே சகல வேத சாஸ்திரங் களையும் கலைகளையும் கற்றுக் கொண்டு விட்டனர்.



அப்போது சிங்கம் ''அரசே! இந்தப் பசு என் ஆகாரமாகும். அதனால் நீ என்னைக் கொல்ல முயன்றது சரியல்ல என்பதை அறிவிக்கவே உன் கை அப்படி நின்று போயிற்று'' என்றது. அது கேட்டு திலீபன் ''நீ உனக்கு ஆகாரமாக என்னை ஏற்றுக் கொள். அந்தப் பசுவை விட்டு விடு'' என வேண்டினான். அப்போது அந்த சிங்கம் மாயமாய் மறைந்தது.

அப்போது நந்தினி திலீபன் தன் பால் கொண்ட பக்தியைப் பாராட்டி தானே அவனை பரீட்சிக்க அவ்வாறு செய்ததாகக் கூறி அவனுக்குப் புத்திர பாக்கியம் கிட்ட வரமளித்து விட்டு மறைந்தது.

திலீபனின் மகனே ரகு. இவன் பெரிய கொடையாளியாகத் திகழ்ந் தான். தன் விருந்தாளியாக யார் வந்தாலும் அவர் மனதில் நினைப் பதை அறிந்து அவற்றை அளித்து வந்தான். ஒரு முறை அவனது விருந்தாளியாக வந்த ஒரு முனிவர் ரகுவின் மனைவியைப் பார்த்து விட்டு அவளை அடைய நினைத் தார். ரகு அதனை அறிந்து தன் மனைவியை அவரது ஆசிரமத்தில் கொண்டு போய் விட்டு விட்டான்.

அப்போது முனிவருக்குத் தமது எண்ணம் எவ்வளவு பாவமானது என்று தெரிந்தது. ரகுவின் மனைவியை அவர் மரியாதையுடன் அரண்மனைக்குத் திருப்பி அனுப்பி வைத்தார். ஆனால் ரகு அவளை ஏற்க சம்மதிக்கவில்லை. ஒரு முறை ஒருவருக்குக் கொடுத்ததை மீண்டும் வாங்கிக் கொள்வது சரியல்ல என்றான். அது கேட்டு ராணி தன்னைக் கொன்று விடும்படி அவனிடம் கேட்டுக் கொண்டாள்.

ரகுவும் அவளை வெட்டத் தன் வாளை உயரத் தூக்கி அடித்தான். ஆனால் அது மலர் மாலையாக மாறி அவள் கழுத்தில் விழுந்தது. அந்த தம்பதி மீது தேவர்கள் மலர்மாரி பொழிந்தார்கள். ரகு தனக்கென எதுவும் வைத்துக் கொள்ளாமல் எல்லாவற்றையுமே தானம் செய்து விட்டான். அதனால் பொக்கிஷத்தில் பணம் இல்லாததால் குபேரனிட மிருந்து பணம் எடுத்து வரச் சென்றான். அழகாபுரியை அடைந்த போது யட்சர்கள் தம் மாயாஜாலங் களால் அவனது முயற்சியை முறியடிக்க முயன்றார்கள். ஆனால் ரகு அவற்றையெல்லாம் வெல்லவே



இறந்தாள். அஜன் தன் மனைவி இறந்ததால் மன வருத்தம் அடையவே நாரதர் அவன் முன் தோன்றி இந்துமதியின் பூர்வ விருத்தாந்தத்தைக் கூறினார்.

திருண பிந்து என்ற முனிவர் செய்த தவத்தைக் கலைக்க இந்திரன் ஹரிணி என்ற தேவலோக மாதை அனுப்பினான். அவள் அந்த முனிவரின் சாபத்தைப் பெற்று மானிட ஜென்மம் அடைந்தாள். தேவலோக மலர் அவள் மீது படும் போதுதான் அவளுக்கு சாபவிமோசனம் என முனிவர் கூறினார். அதன்படி நாரதரின் வீணை மீதிருந்து தேவலோக மலர் அவள் மீது விழுந்ததும் அவள் இறந்து தேவலோகம் சென்றாள்.

இந்த அஜனின் மகன் தசரதன். இஷ்வாகு வம்ச மன்னர்கள் தேவர்களுக்கு அசுரர்களை அழிக்க அவ்வப் போது உதவி வந்தார்கள். தசரதனும் அது போல ஒரு முறை இந்திரனுக்கு உதவச் சென்றான். தசரதனோடு கைகேயியும் போர்க்களத்திற்குச் சென்றாள். அப்போரில் தசரதனின் ரதச் சக்கரம் கழன்று விடாதபடி அவள் அதனை வெகு சாமர்த்திய மாகச் செலுத்தினாள். அது கண்டு மகிழ்ந்து தசரதன் அப்போது அவளுக்கு இரண்டு வரங்களை அளித்தான். அவளும் அவற்றைத் தான் விரும்பும் போது கேட்டு வாங்கிக் கொள்வதாகக் கூறினாள்.

தசரதன் ஒரு நாள் வேட்டையாடும் போது இருட்டும் வேளையில் எங்கோ யானை நீர் குடிப்பது போன்ற

குபேரன் மகிழ்ந்து மனம் உவந்து ஏராளமான விலையுயர்ந்த பொருள் களைக் கொடுத்து அனுப்பினான். ரகு அதனைக் கொண்டு தொடர்ந்து தான தருமங்களைச் செய்யலானான்.

ரகுவின் மகன் அஜன். மன்னன் அஜனும் மாபெரும் வீரனே. சுயம் வரத்தில் போஜராஜனின் மகள் இந்துமதி அஜனைத் தேர்ந்து எடுத்தாள். இதனால் மற்ற மன்னர்கள் ஆத்திரம் கொண்டு அஜனைத் தாக்கி னார்கள். அஜன் அவர்களை எல்லாம் எதிர்த்து வென்றான். அஜன் இந்துமதி யுடன் ஒரு நாள் பூங்காவில் உலாவிக் கொண்டிருந்தான் அப்போது நாரதர் ஆகாயத்தில் சென்று கொண்டிருக் கையில் அவரது வீணையில் சுற்றப் பட்ட மலர் மாலையிலிருந்து ஒரு தேவலோக மலர் இந்துமதியின் மீது பட்டது. மறு நிமிடமே அவள்

சத்தம் கேட்டு அம்பை எய்தான். அது யானை செய்த சத்தம் அல்ல. ஒரு முனிவரின் மகன் தன் கமண்டலத்தில் நீர் மொண்ட போது ஏற்பட்ட சத்தம் அது. தசர தன் எய்த அம்பு அந்த முனிவரின் கும ாரனின் உயிரைப் பறித்து விட்டது.

தசரதன் அந்த கமண்டல நீரை எடுத்துக் கொண்டு அந்த முனி குமாரனின் கண்பார்வை இழந்த கிழப் பெற்றோர்களிடம் போய் நடந்ததைக் கூறினான். அவர்கள் மகனின் பிரிவு ஆற்றாமல் ''நீயும் எங்களைப் போல மகனைப் பிரிந்து அவன் நினைவில் உயிரை விடுவாய்'' எனச் சபித்து இறந்து போனார்கள். சூரியவம்சத்து மன்னர்கள் தம்மிடம் அடைக்கலம் புகுந்தவர்களைக் கைவிட மாட்டார்கள். சிபி சக்கரவர்த்தி இதற்குப் பெயர் போனவன். அவனைப் பரீட்சிக்க இந்திரனும் அக்னியும் புறாவும் கழுகுமாக உரு எடுத்து வந்த ார்கள். புறா சி பியின் மடியில் வந்து உட்கார்ந்தது. கழுகு அதனைக் கேட்க சிபி அதன் நிறைக்குத் தன் உடலிலிருந்து மாமிசம் அறுத்துக் கொடுப்பதாகக் கூறினார். கழுகும் சம்மதித்தது.

தராசில் ஒரு தட்டில் புறாவை வைத்து விட்டு மறு தட்டில் சிபி தன் உடலிலிருந்து மாமிசத்தை அறுத்து வைத்தார். எவ்வளவு வைத்தும் தட்டு சம நிலைக்கு வராது போகவே அவரே தட்டில் உட்காரவே தட்டுகள் சமநிலையை அடைந்தன.



அப்போது இந்திரனும் அக்னியும் தம் உண்மையான உருவை எடுத்து சிபி சக்கரவர்த்தியைப் பாராட்டிப் பல வரங்கள் அளித்து விட்டுச் சென்றார்கள்.

இஷ்வாகு மன்னன் அம்பரீஷன் விஷ்ணுவின் பரம பக்தன். அம்பரீஷனுக்கு லட்சுமியின் அம்சமாக ஸ்ரீமதி என்ற மகள் பிறந்தாள். அவள் சிறு வயது முதல் விஷ்ணுவையே தன் கணவராகக் கருதி வந்தாள். அவள் மிகவும் அழகானவள்.

ஒரு முறை நாரதர் பர்வதர் என்ற மகா முனிவரிடம் தன்னை மாயை ஒன்றும் சொல்ல முடியாது எனப் பெருமை அடித்துக் கொண்டார். அதனைப் பரீட்சிக்கலாம் என இருவரும் உலகைச் சுற்றி வந்தனர். அவர்கள் அம்பரீஷனைக் காணச் செல்ல அம்மன்னனும் தன் மகள் ஸ்ரீமதியைக் கொண்டு அவர்களுக்குப் பணிவிடைகள் செய்யச் செய்தான்.

விஷ்ணுவின் மாயை அந்த இருவர் மீதும் படிந்தது. ஸ்ரீமதியை பார்த்த இரு முனிவர்களும் அவளை மணக்க விரும்பி தம் விருப்பத்தை அம்பரீஷனிடம் கூறினார்கள். அம்பரீஷனுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. அவன் ''அவளது சுயம்வரத்திற்கு நான் ஏற்பாடு செய்கிறேன்'' எனக் கூறி அனுப்பினான்.

ஸ்ரீமதியை எப்படியாவது அடைந்து விடுவது என நாரதர் முயன்றார். இதைக் கண்ட பர்வதர் தான் ஸ்ரீமதியை அடைய முடியா விட்டாலும் நாரதர் அடையும் படி விட்டு விடக் கூடாது என நினைத்தார். நாரதர் விஷ்ணுவிடம் போய் தான் அழகாக விளங்க ஆபரணங்களும் மகுடமும் கேட்டு வாங்கி கொண்டு சென்றார். அவருக்குப் பின் வந்த பர்வதர் விஷ்ணுவிடம் ''இந்த நாரதர் சுயம்வர மண்டபத்தில் அமர்ந்திருக்கும் போது அவரது முகம் குரங்கினுடையதாக மாறி விட வேண்டும்'' என்று வேண்டினார். விஷ்ணுவும் அப்படியே ஆகும் எனக் கூறினார்.



அயல் நாட்டுக் கதைகள்

அமெரிக்க நாட்டுப் புராதனக் கதை

# சிவப்பிந்தியர்கள் உருவான வரலாறு



**ப**ல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் நடந்த சம்பவம் இது. பூமிஉருவாக்கப் பட்டு, அதில் மரம் செடி கொடிகள், மலை, ஆறுகள், கடல் அனைத்தும் தோன்றி மனிதன் மட்டும் தோன்றாத காலம் அது.

ஒருநாள் காலை சிவப்பிந்தியர் களின் கடவுள   ான மைனிட்டு மனிதனை சிருஷ்டி செய்யும் நேரம் வந்து விட்டது என்று எண்ணி, ஆற்றுப் படுகையில் இருந்து மண் எடுத்து, அதில் மனிதன்உடைய உருவத்தைத் தான் விரும்பிய வண்ணம் உருவாக்கினார். பிறகு அதை ஒரு பெட்டியில் வைத்து மூடி, உலைக்களத்தில் வைத்து விறகு களால் தீ மூட்டி, பெட்டிக்குள் இருக்கும் மனித உருவ த்தை காய்ச்சி பதப்படுத்த முனைந்தார். வேலை செய்த களைப்பினால் மைனிட்டு சற்றே கண்ணயர்ந்து உறங்கி விட்டார். சற்று நேரம் கழித்து, திடுக்கிட்டுக் கண் விழித்த மைனிட்டு பெட்டியிலிருந்து மனித மண் பொம்மையை பார்க்கையில் அது கருகி இருந்தது. ''பரவாயில்லை, இது கறுப்பு மனிதர்களின் இனமாக இருக்கட்டும்'' என்று அதற்கு உயிரூட்டி பூமிக்கு அனுப்பி வைத்தார்.

மறுநாள் மைனிட்டு நேற்று நடந்தது போல் தீய்ந்து விடக்கூடாதே என்று, சற்று முன்னதாகவே உலையி லிருந்து பொம்மையை எடுத்து விட்டார். இந்த முறை சரியாகக் காய்ச்சப் படாததால் பொம்மை வெண்மையாக இருந்தது. பரவா யில்லை. இது வெள்ளையர்களின் இனமாக இருக்கட்டும்'' என்று அதற்கு உயிரூட்டி பூமிக்கு

அனுப்பினார். அதற்கு அடுத்த நாளும் மண்ணில் மனித உருவத்தை வடித்த மைனிட்டு, கடந்த தினங்களில் நடந்த தவறு மீண்டும் நடக்காமல் இருக்க பொம்மையின் மீது எண்ணெய் தடவி உலையில் வைத்தார். இம்முறை பொம்மை வெண்மையாகவும் இல்லாமல் மஞ்சள் நிறத்தில் இருந்தது.

''பரவாயில்லை. மஞ்சள் நிற இன மக்களாக இருக்கட்டும்'' என்று அதையும் உயிரூட்டி பூமிக்கு அனுப்பினார்.

நான்காவது நாள் மீண்டும் மண்ணில் ஒரு மனித உருவத்தை உருவாக்கி, அதில் சரியான அளவு மட்டுமே எண்ணெய் தடவினார். உலையில் சரியான அளவு விறகு வைத்து அதிகம் காய்ச்சாமல் அதே சமயம் சரியான நேரத்திற்கு பொம்மையைக் காய்ச்சினார். மிகுந்த எச்சரிக்கையுடன் சூடாக்கிய பிறகு, உலையிலிருந்து பெட்டியை அகற்றி, அதைத் திறந்து பார்த்தார். இந்த முறை மைனிட்டு விரும்பிய வண்ணம் சிவந்த நிறத்தில் பொம்மை. ''இது சிவப்பு நிற மனிதர்களின் இனமாக இருக்கட்டும்'' என்று சொல்லி விட்டு, மனித உருவத்தை செய்து முடித்த திருப்தியுடன், அந்த அழகான பொம்மைக்கு உயிரூட்டி அதை பூமிக்கு அனுப்பிவைத்தார். பிற் காலத்தில் இவர்களே சிவப் பிந்தியர்கள் ஆயினர். வெவ்வேறு இன மக்கள் பூமியில் எவ்வாறு தோன்றினர் என்பதை விளக்கும் இந்தக் கதை சிவப்பிந்தியர்களின் புராணத்தில் காணப்படுகிறது.





# மன்னனின் சாமர்த்தியம்

**பி**ரமோதபுரியை ஆண்டு வந்த மன்னன் சந்திரசூடன் தன் குடி மக்களை கண்ணும் கருத்துமாய் தன் சொந்தப் புதல்வர்களைப் போல் பாவித்து தனது ராஜ்ஜியத்தையும் திறமையாக நிர்வாகம் புரிந்து வந்தான். அப்படியிருக்கையில் ஒரு நாள் நாட்டில் தனாதிகாரியாய் இருந்தவர் இறந்துவிட அவருடைய இடத்தில் யாரை நியமிப்பது என்பதில் சிக்கல் ஏற்பட்டது.

காலஞ்சென்ற தனாதிகாரியின் மகன் விபீஷணன் தான் அந்தப் பதவிக்குப் பொருத்தமானவன் என்று மன்னனுக்குத் தோன்றியது. ஆனால் அந்தப் பதவியைப் பெற நாட்டில் பலர் விருப்பப்பட்டனர். ராணியினுடைய சகோதரனும் மன்னன் உடைய மைத்துனனும் தங்களுடைய உறவினனை அப்பதவியில் அமர்த்த ஆசைப்பட்டனர். இதற்காக அடிக்கடி மன்னன் சந்திரசூடனை சந்தித்து தங்கள் கோரிக்கையை வலியுறுத்தினர். இது சந்திரசூடனுக்கு சிக்கலான பிரச்சினையாக இருந்தது. மன்னன் தனது அனுபவமிக்க முதல் அமைச்சரிடம் இதைப்பற்றி ஆலோசனை கேட்டான். அவர், ''பிரபு, குடிமக்களின் நலனே மன்னருக்கு முக்கியம். அந்தப் பதவிக்குப் பொருத்தமான நபரையே தாங்கள் தேர்வு செய்ய வேண்டும். அதே சமயம் தங்கள் உறவினர்கள் மனமும் புண்படக் கூடாது. ஆகவே இந்த விஷயத்தில் நீங்கள் ராணியின் சகோதரன் ரங்கசேனனிடமும் உங்கள் சகோதரியின் கணவரான ராஜ குப்தனிடமும் ஆலோசித்து முடிவு எடுங்கள்'' என்றார்.

அதன்படி அரசன் அவ்விருவரையும் அழைத்து ''நீங்கள் இருவரும் என் நெருங்கிய உறவினர்கள். நீங்கள் ஒவ்வொருவரும் உங்களுக்கு வேண்டிய ஒருவனை இந்தப்

-லட்சுமி பிரசாத்-



பதவிக்காக சிபாரிசு செய்கிறீர்கள். ஆகவே நீங்கள் இருவரும் பேசி, யாராவது ஒருவனை தேர்ந்தெடுங் கள்'' என்றான்.

ரங்கசேனனும், ராஜகுப்தனும் தங்களுக்குள் பலவாறு விவாதம் செய்தும் ஒரு முடிவுக்கு வர முடிய வில்லை. தன்னுடைய ஆள்தான் தனாதிகாரியாக வேண்டுமென்பதில் இருவருமே மிகவும் பிடிவாதமாக இருந்தனர். இறுதியி ல் முடிவை மன்னனிடமே விட்டு விட்டனர்.

சந்திரசூடன் அவர்களிடம், ''தன்னுடைய உறவினர் தான் இப் பதவியை அடைய வேண்டுமென்று நீங்கள் பிடிவாதமாக இருக்கிறீர்கள். இந்த விஷயத்தில் உங்களுக்கு உடன்பாடு ஏற்படவில்லை. நான் ஒன்று சொல்கிறேன். தனாதி காரியைத் தேர்வு செய்ய நான் ஒரு குழுவை அமைக்கப் போகிறேன். அதில் மூன்று பிரதிநிதிகள் இருப் பார்கள். நீங்கள் இருவர், உங்களுடன் மூன்றாவதாக என்னுடைய அதிகாரி களில் ஒருவனான தேவநாதனையும் இந்தக் குழுவில் நியமனம் செய் கிறேன். நீங்கள் மூவரும் நியாயாதி காரியை சந்தித்து அவர் சொல்லும் விதிமுறைகளுக்கொப்ப யாராவது ஒரு நபரைத் தேர்வு செய்யுங்கள்'' என்றான்.

மூவரில் அதிகபட்சம் யாரை சிபாரிசு செய்கிறார்களோ, அவரே தேர்வு செய்யப்படுவார் என்று தெரிந்ததும் இருவரும் தேவநாதனை தன் வசம் ஈர்த்துக் கொள்ள முடிவு செய்தனர். மறுநாள் நியாயாதி காரியை சந்தித்தபோது ஆலோசனைக் குழுவில் உள்ளவர்கள் தங்கள் உறவினர்களை சிபாரிசு செய்யக் கூடாது என்ற விதிமுறையை சொன்னவுடன் இருவரும் ஏமாற்றம் அடைந்தனர்.

இருவரும் ஆலோசனைக் குழுவி லிருந்து விலகி தேவநாதன் தேர்வு செய்யும் நபரைத் தாங்கள் அங்கீகரிப்பதாக மன்னனிடம் சொன்னார்கள். இப்படிச் சொல்லி விட்டு, உடனே ரங்கசேனன் தேவ நாதனைத் தனிமையில் சந்தித்தான். ''தேவநாதா, என்னுடைய உறவினனை மட்டுமே நீ தேர்ந் தெடுக்க வேண்டும். அப்படிச் செய்தால் உனக்கு விலை மதிப்பற்ற பல பரிசுகள் தருவேன். மீறினால்

உன்னை வழக்கில் சிக்க வைத்து சிறைக்குத் தள்ளுவேன்'' என்று பயமுறுத்திவிட்டுச் சென்றான்.

சற்று நேரத்திற்கெல்லாம் ராஜ குப்தனும் தேவநாதனைத் தேடி வந்தான். ரங்கசேனனைப் போலவே அவனும் தேவநாதனுக்கு ஆசை காட்டி, அவனை பயமுறுத்தவும் செய்தான்.

உடனே தேவநாதன் ''ராஜகுப்தரே சற்றுமுன் வந்த ரங்கசேனரும் இதையே தான் சொன்னார். அரசனின் நெருங்கிய உறவினர்களான உங்கள் இருவரில் நான் எந்தப் பக்கம் சாய முடியும்? '' என்று கேட்டான். ''அதெல்லாம் எனக்குத் தெரியாது. ரங்கசேனனுடைய உறவினனை நீ தேர்வு செய்யவே கூடாது. ஞாபக மிருக்கட்டும்'' என்று உறுமிவிட்டுச் சென்றான்.

பெருங்குழப்பம் அடைந்த தேவநாதன் மன்னனிடம் சென்று நடந்த விஷயங்களை விளக்கினான். அவனுக்கு சமாதானம் கூறிவிட்டு சந்திரகூடன் தன் உறவினர்களை மீண்டும் அழைத்து அவர்களிடம், ''தேவநாதன் நன்கு விசாரித்து, நன்கு ஆராய்ந்தபின் நாராயணன் என்றவனை தனாதிகாரி பதவிக்கு சிபாரிசு செய்துள்ளான். நான் என்ன செய்யட்டும்? '' என்று வருத்தப் படுபவனைப் போல் நடித்தான். தொடர்ந்து ''அந்த நாராயணனை விட, உங்கள் உறவினர்களில் ஒருவனே பரவாயில்லை எனத் தோன்றுகிறது. நீங்கள் மறுபடியும்



கலந்து ஆலோசித்து உங்கள் உறவினர்களில் ஒருவனை முடிவு செய்கிறீர்களா?'' என்று ஆவலுடன் கேட்பவனைப் போல் நடித்தான்.

தனது உறவினனுக்கு பதவி கிடைக்காமல் போயிற்று என்று வருத்தப்பட்டாலும், மற்றொரு வனுக்கும் கிடைக்காமல் போனதைப் பற்றி ரங்கசேனனும், ராஜகுப்தனும் உள்ளுக்குள் மகிழ்ச்சி அடைந்தனர். இந்த எண்ணத்துடன் ''அரசே, தேவநாதன் முடிவு செய்தபடி நாராயணனே இருக்கட்டும்'' என்றனர் இருவரும்.

உடனே அரசன், ''உங்கள்உறவினர் களில் ஒருவனுக்குக் கொடுத்து விடலாம் என்றிருந்தேன். இப்போது நீங்களே அது வேண்டாம் எனக் கருதி நாராயணனை வரவேற்கிறீர்கள். மிக்க மகிழ்ச்சி. உங்கள் இருவரின் மகிழ்ச்சியும், ஒற்றுமையும் தான் எனக்கு முக்கியம். ஆனால் தேவநாதன் தேர்வு செய்த நபர் சரியில்லை எனக் கருதுகிறேன். என்னுடைய அபிப்பிராயப் படி தனாதிகாரிப் பதவிக்கு தனாதி காரியின் மகன் விபிஷணனே பொருத்தமானவன். தன் தந்தையைப் போல் மிகத் திறமையானவன். என்னுடைய கருத்தை நீங்கள் ஆதரிப்பீர்கள் என நம்புகிறேன். உங்கள் அறிவிலும் புத்தி கூர்மை யிலும் எனக்கு மிகுந்த நம்பிக்கை உண்டு. ஆகவே உங்கள் கருத்தை அறிய விரும்புகிறேன்'' என்று வினயத்துடன் மன்னன் அவர் களுக்குப் புகழ்மாலை சூட்டினான்.

அதில் நெகிழ்ந்து போன இருவரும் விபீஷணனை தனாதி காரியாக நியமிக்க தங்கள் முழு ஆதரவைத் தெரிவித்தனர்.

இவ்வாறாக தன் உறவினர்களின் மனதைப் புண்படுத்தாமல், சாமர்த்தி யமாக தான் மனதில் நினைத்த நபரையே தனாதிகாரியாக்குவதில் மன்னன் சந்திரசூடன் வெற்றி பெற்றான்.

தன் முதல் அமைச்சரிடம் நடந்த வற்றைக் கூறியதும் மந்திரி, ''பிரபு, மக்களின் நலனுக்காக, நீங்கள் செய்த இந்த சாமர்த்தியமான நாடகம் மெச்சத்தக்கது'' என்றார்.





# மன்னனின் நேர்மையான தீர்ப்பு

நீதிக்கும் நியாயத்திற்கும் பெயர் பெற்ற இலவணபுரியின் மன்னரைக் காண ஒரு பிராமணன் வந்தான். காவலர்கள் அவனை மன்னரை சந்திக்க அனுமதி தர மறுத்து, மறுநாள் வரும்படிச் சொன்னார். இதற்குள் அந்த பிராமணனைக் கண்டுவிட்ட மன்னரே அவனை உள்ளே அழைத்தார்.

அந்தப் பிராமணன் அவரை வணங்கி விட்டு ''அரசே, உங்களிடம் முறையிட வந்துள்ளேன். பல நாடு களில் சுற்றித் திரிந்து மிகவும் சிரமப் பட்டு நூறு பொற்காசுகள் சேர்த்தேன். பயணக் களைப்பில் நேற்றிரவு ராஜ பாட்டைக்கு அருகில் ஒரு தோட்டத்தில் படுத்து உறங்கி விட்டேன். காலை எழுந்திருந்து அன்றாடப் பணிகளை செய்யும் போது என் பணப்பை தவறிப் போய் அங்கிருந்த கிண ற்றில் விழுந்து விட்டது. அங்கு கிணறு இருப்பதே தெரியாதபடி செடி கொ டிகள் வளர்ந்திருந்தன. என்ன செய்வது என்று தெரியாமல் கலங்கிப் போய் விட்டேன். அப்போது அங்கே என்னை நோக்கி வந்த ஒரு மனிதன், ''உன்னுடைய பணப்பையை நான் மீட்டுத் தந்தால் நீ எனக்கு என்ன தருவாய்? '' என்று கேட்டான். சிரமப்பட்டு சேர்த்த பணத்திலிருந்து அதிகமாக அவனுக்குக் கொடுக்க எனக்கு மனமில்லை. ஆயினும் அவன் உதவிக்காக, ''உனக்கு எத்தனை விருப்பமோ, அதை எனக்குக் கொடு'' என்றேன். உடனே அந்த மனிதனும் கிணற்றில் இறங்கி என் பையை எடுத்துக் கொடுத்தான். பிறகு என்னுடைய மீட்கப் பட்ட பையிலிருந்து இரண்டு பொற் காசுகளை மட்டும் எனக்குக் கொடுத்து விட்டு, மற்றதைத் தானே வைத்துக் கொண்டான். இது நியாயமல்ல என்று நான் அவனுக்குக் கூறியும், அவன் மறுத்து விட்டான். இதை நீங்கள் தான் விசாரித்து சரியான நீதி

- 25 ஆண்டுகளுக்கு முன் அம்புலிமாமாவில் வெளியான கதை -

வழங்க வேண்டும்'' என்றான். ''அந்த ஆள் யாரெனத்தெரியுமா?'' என்று மன்னர் கேட்க, ''அவன் யாரென்று தெரியாது'' என்று பிராமணன் பதிலுரைத்தான்.

''சரி. நான் அந்த ஆளைக் கண்டு பிடித்து நாளை உன் முன்னிலையில் விசாரிக்கிறேன்'' என்று கூறி மன்னர் அகன்றார்.

மறுநாள் இலவணபுரியில் இருந்த தன் குடிமக்கள் அனைவரையும் மன்னர் தன் அவைக்கு அழைத்தார். அவர்களில் பணப்பையை மீட்டுக் கொடுத்த மனிதனை அடையாளம் காட்டச் சொன்னதும், பிராமணனும் உடனே அந்த ஆளைக் கண்டு பிடித்து அடையாளம் காட்டினான். மன்னர் அவனை விசாரிக்க அவனும் பிராமணன் கூறிய அதே வார்த்தை களை அப்படியே திருப்பிக் கூறினான்.

வாதி, பிரதிவாதி இருவரின் வார்த்தைகளும் ஒரே மாதிரி இருக்க, மன்னர் எவ்வாறு தீர்ப்புக் கூறுவார் என்று அறிய அனைவரும் ஆவலாயிருந்தனர்.

ஆனால் மன்னரோ உடனே ''பிரதிவாதி பிராமணனுக்கு 98 பொற் காசுகள் கொடுக்க வேண்டும். 2 காசுகள் மட்டுமே தான் வைத்துக் கொள்ள வேண்டும்'' என்றதும் அங்கு கூடியிருந்தோர் திகைத்துப் போயினர். மன்னரின் தீர்ப்பு சரி இல்லை என்று யாவரும் எண்ணினர். சிலர் தங்கள் மறுப்பையும் தெரிவித்தனர். உடனே மன்னர், ''சில சமயங்களில் நியாயம் அநியாயம் இரண்டும் ஒன்று போல் இருக்கும். நமது புத்தி கூர்மையால் அதை தரம் பிரித்துக் காண வேண்டும். இந்த பிராம்மணன், ''நீ கொடுப்பதை நான் வாங்கிக் கொள்வேன்'' என்று சொல்லவில்லை. ''உனக்கு எத்தனை விருப்பமோ அதைக் கொடு'' என்று தான் சொன்னான்.

அந்தப்பையில் இருந்த நூறு பொற்காசுகளில் இந்த மனிதன் 98 காசுகள் விரும்பினான். ஆகவே அவன் விரும்பிய 98 காசுகளை ஒப்பந்தப்படி பிராமணனுக்குக் கொடுப்பதுதான் நியாயம்'' என்று விளக்கமும் அளித்தான்.



சில ஆண்டுகள் காட்டில் வசித்த மன்னர் சாந்தி தேவருக்கு ராணி உயிருடன் இல்லை என்பதும் அவரது மகன் ஜெயாநந்த முனிவரிடம் வளர்ந்து வருகிறான் என்பதும் தெரிய வருகிறது. முனிவரது ஆலோசனைப்படி தன் மகனை நேரில் சந்திக்கும் ஆர்வத்தை அடக்கிக் கொள்கிறார். குடிமக்கள் வீரசிம்மனை எதிர்த்து வசந்தன் தலைமையில் கலகம் செய்கின்றனர். ஒருமுறை வீரசிம்மனது சேனாதிபதி அமரசிங்கனின் ஆட்களிடமிருந்து வசந்தனை மன்னரே காப்பாற்றுகிறார்.

14

# சூர்யா

## வீர இளவரசனின் துணிகரச் செயல்கள்

ஓவியம் : காந்தி அய்யா



















நண்பர்களே! அமரசிம்மன் நமது மறைவிடத்தைக் கண்டு பிடித்து விட்டான். நீங்கள் ஓடி விடுங்கள் சீக்கிரம்


வசந்தனைத் தவிர அனைவரும் சென்று விடுகின்றனர்.


வசந்தா, ஏன் இன்னும் நின்று கொண்டு இருக்கிறாய்?
உங்களைத் தனியே விட்டு நான் எப்படிச் செல்வேன்?


மன்னர் சாந்திதேவர் தன் வாளை எடுக்கிறார். சண்டையிடத் தயாராகிறார்.
நாம் அவர்களை விரட்டி விடலாம்
அவர்கள் வந்து விட்டனர் மகாராஜா!


இரண்டு வீரர்கள் முதலில் வரு கின்றனர். அவர்களுக்கு பின் அமரசிம்மன் வருகிறான்.
முன்னால் செல்


சாந்திதேவன் முன் சென்று பலமாக அவர்களைத் தாக்குகிறார். ஒரு வீரன் கீழே விழுகிறான். அவன் பின்னால் மற்றும் சில வீரர்கள்...
திரும்பிப் போ! இல்லையெனில்...
ஆ!


அமரசிம்மன் சாந்திதேவருக்கு நேர் எதிரே வந்து விடுகிறான். அப்படியும் மன்னரை அவனுக்கு அடையாளம் தெரியவில்லை.
வசந்தா! இறுதியில் உன்னை....
ஓரடி முன்னே எடுத்து வைத்தால், உன் தலை தரையில் உருளும்
ஆ!


சாந்திதேவரின் ஒரே வாள் வீச்சில் அமரசிம்மன் கீழே வீழ்கிறான்.
ஆ! ஆஹ்!!


அமரசிம்மன் பின்னாலிருந்த மற்றொரு வீரனும் மன்னரை வசந்தன் என்று எண்ணுகிறான்.
வசந்தனே! இதுதான் உனது கடைசி இரவு


வீரன் தன்னுடைய வாளை மன்னர் மீது வீசுகிறான்....


...மன்னர் காயம் அடைகிறார்


மன்னருக்குப் பொறுக்க முடியாத வலி உண்டாகிறது


வீரன் ஒருவன் மன்னர் மீது வேலெறிந்ததைக் கண்டு...


...வசந்தன் அவன் மீது தன் வாளை வீசுகிறான்


...அவன் இறந்து வீழ்கிறான்.


நமது சேனாதிபதி, உயிரிழந்தார்


இறந்த அமரசிங்கனையும், வீரனையும் அங்கேயே விட்டுவிட்டு மற்றவர் ஓட்டம் பிடிக்கின்றனர்.
நாம் ஓடிப்போய் நமது தலைவர் விரசிம்மனிடம் சொல்வோம்


வசந்தன் மன்னர் அருகில் சென்று அவரைப் பிடித்துக் கொள்கிறான்.
மகாராஜா! உங்களை நான் பத்திரமான இடத்திற்கு அழைத்துச் செல்கிறேன்
வசந்தா! எனக்கு சிறிது தண்ணீர் கொடு!
தொடரும்.

# தண்ணீரின் மதிப்பு



''அப்பா! எவ்வளவு வெயில்!'' என்று முனகிக் கொண்டே, வீணாவின் தந்தை சோபாவில் அமர்ந்தார். இதைக் கண்டதும் வீணா அவருக்கு குடிக்கத் தண்ணீர் எடுத்து வர சென்றாள்.

அப்போது வீணாவின் அம்மா ராதிகா கவலை யுடன் தன் வீட்டுக்குள் நுழைந்தாள். ''என்ன விஷயம் ராதிகா?'' என்று கேட்டார் வீணாவின் அப்பா.

எப்போது தண்ணீர் வரும் என்று தெரிந்து கொள்ள நான் வெளியே சென்றேன். நமது குடி இருப்புப் பகுதியில் உள்ள நான்கு ஆழ் கிணறுகளிலும் தண்ணீர் மட்டம் மிகவும் குறைந்து விட்டது. நிலைமை மோசமானால் மூன்று நாளைக்கு ஒரு முறைதான் தண்ணீர் விடுவார்களாம்'' என்றாள் ராதிகா. ''ஆனால் நம்மிட மிருந்து கிணறு தூர் எடுக்க பணம் வாங்கினார்களே! அது என்ன ஆயிற்று?'' என்றார் வீணாவின் அப்பா.

''தூர் எடுத்தும் பயன்இல்லை. அதனால் விட்டு விட்டார்கள் என்று நினைக்கிறேன்'' என்று ராதிகா கூறினாள்.

இவர்களின் பேச்சை கவனித்துக் கொண்டுஇருந்த வீணா ''அம்மா இந்த சூழ்நிலையில் நாம் ஏதாவது உதவி செய்ய முடியுமா?'' என்று கேட்டாள்.

''தண்ணீரை சிக்கன மாகப் பயன்படுத்தினால் அதுவே பெரிய உதவி தான். உதாரணமாக பல் துலக்கும் போது குழாயைத் திறந்து தண்ணீரை வீணாக ஓட விடக் கூடாது. குளிப்பதற்கு ஷவரைப் பயன்படுத்தமால் வாளியில் தண்ணீர் எடுத்துக் குளித்தால் தண்ணீர் விணாகச் செலவாகாது'' என்றாள் வீணாவின் அம்மா.

''அப்படியா! இனி நான் தண்ணீரை சிக்கனமாக செலவழிப்பேன். ஏனெனில் ஒவ்வொரு துளித் தண்ணீரும் விலை மதிப்புள்ளது என்று இன்று புரிந்து கொண்டேன்'' என்றாள் வீணா.

## உங்கள் விஞ்ஞானம்

### முதல் அறுவை சிகிச்சை நிபுணர்



இந்தியாவின் முதல் அறுவை சிகிச்சை நிபுணராகக் கருதப்படும் சுஸ்ருதர் கி.மு. ஆறாம் நூற்றாண்டில் பிறந்தார். வாரணாசியிலிருந்த ஓர் ஆசிரமத்தில் தன்வந்திரியிடம் நேரடியாக மருத்துவமும், அறுவை சிகிச்சையும் பயின்றார்.

தன் நூலான 'சுஸ்ருத சம்ஹிதை'யில் அறுவை சிகிச்சைக்குப் பயன்படும் 20 கூரான ஆயுதங்களைப் பற்றியும், கூரில்லாத மழுங்கிய 101 ஆயுதங்களைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளார். இந்த ஆயுதங்களின் தோற்றங்கள் எந்த மிருகங்களின் பறவைகளின் தோற்றத்தை ஓரளவு ஒத்திருந்ததோ, அதையொட்டி ஆயுதங்களுக்கு பெயர்கள் சூட்டப்பட்டன. பொதுவான அறுவை சிகிச்சைகளில் மட்டுமல்லாமல் கண், சிறுநீரகம் ஆகிய அங்கங்களின் அறுவை சிகிச்சைகளிலும் தேர்ச்சி பெற்றிருந்தார்.

## உங்கள் சுற்றுப்புறம்

### மாமிசம் உண்ணும் தாவரங்கள்

பார்க்க அப்பாவியாக இருக்கும் தாவரங்கள் மற்ற உயிர்களை கொன்று தின்ன முடியுமா? அப்படியும் சில தாவரங்கள் உள்ளன. ஆங்கிலத்தில் 'பிச்சர் பிளாண்ட்' எனப்படும் செடி கரப்பான் மற்றும் பல பூச்சிகளை உண்கிறது. இந்தச் செடியில் சுருக்குப் பை போன்ற ஒரு பகுதி இலைகளின் அருகே முளைத்திருக்கும். இந்தப் பையிலுள்ள சீரண நீர் அதற்குள் விழும் பூச்சிகளைக் கொன்று சீரணித்து விடுகிறது.

இந்தச் செடியில் இரண்டு வகைகள் உள்ளன. ஒன்று தரையில் படரும். மற்றொன்று கொம்பினைப் பற்றி உயரும் கொடி போன்றது. தரையில் படரும் செடிகளில் மேற்கூறிய பை சற்று அகலமாகவும் கொடிகளில் உள்ள பை குறுகலாகவும் உயரமாகவும் இருக்கும். இந்தப் பைகளுக்கு மூடியும் உண்டு. பையினுள் சீரண நீர் உற்பத்தி செய்யும் சுரப்பிகளும் உண்டு. பொதுவாக சுருக்குப்பை அமைப்பு முழுவதுமாக வளர்ந்ததும் மூடி திறந்து கொள்கிறது.



# உங்கள் பக்கங்கள் உங்கள் பக்கங்கள்

## உங்களுக்குத் தெரியுமா?

### மூக்குக் கண்ணாடி

மூக்குக் கண்ணாடி எப்போது கண்டு பிடிக்கப்பட்டது என்பது இன்னமும் தெரியவில்லை. 1266ம் ஆண்டு ரோஜர் பேக்கன் என்ற ஆங்கிலேயர் புத்தகங்களிலுள்ள எழுத்துக்களைப் பெரிதாக்கிப் படிக்க ஒரு கண்ணாடியை எழுத்துக்களின் மீது வைத்துப் படித்தார். இதுதான் மூக்குக் கண்ணாடியின் ஆரம்ப நிலை.

இத்தாலியில் 1352ஆம் ஆண்டு மூக்குக் கண்ணாடி அணிந்த ஒரு மத குருவின் ஓவியத்திலிருந்தான் இவை சிலரால் பயன் படுத்தப்படத் தொடங்கின என்று தெரிகிறது.

வடக்கு இத்தாலியிலும் தெற்கு ஜெர்மனியிலும் 16ம் நூற்றாண்டில் இருந்து அதிக அளவில் மூக்குக் கண்ணாடிகள் தயாரிக்கப்படத் தொடங்கின.

பார்வைக் குறைவுக்காக மட்டுமின்றி, வேறு பல காரணங்களுக்காகவும் இன் று பெ ரும்பாலானோர்களால் மூக்குக் கண்ணாடிகள் அணிகின்றனர். சூடான உலைகளிலிருந்து வரும் அக சிவப்புக் கதிர்கள் கண்களில் படாமல் இருக்க கண்ணாடிகள் அணியப்படுகின்றன.



## நம் இந்தியா

**கீழ்காணும் கேள்விகளில் குறிப்பிடப்படும் மகான்களைக் கண்டு பிடிக்க உங்களால் முடியுமா?**



1. கொள்ளைக்காரனாக இருந்து பின் பக்தராக மாறி ஒரு மகா காவியத்தை இயற்றியவர். அவரது இயற்பெயர் ரத்னாகர்.
அ) நந்தனார் ஆ) வள்ளுவர்
இ) வால்மீகி



2. ராஜஸ்தானில் பிறந்த இந்தப் பெண்மணி பகவான் கிருஷ்ணரிடம் தீவிர பக்தி கொண்டு, அவர் மீது பல பாடல்களை இயற்றியவர்.
அ) சாரதா தேவி
ஆ) ஆண்டாள் இ) மீராபாய்



3. கிட்டத்தட்ட 70 விதமான சித்தாந்தங்களை அத்வைதம் மூலம் ஒருங்கிணைத்த மகான்.
அ)ஆதி சங்கரர்
ஆ) ராமானுஜர் இ) பாசா



4. 'ஆசியாவின் ஒளி' என்று குறிப்பிடப்பட்ட மதத்தலைவர் யார்?
அ) ராமகிருஷ்ண பரமஹம்சர்
ஆ) கௌதம புத்தர்
இ) ராமானுஜாச்சாரியர்

(விடைகள் 66ம் பக்கம்)

# போட்டோ வாக்கியப் போட்டி



**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**



NARAYANAMURTHY TATA



NARAYANAMURTHY TATA

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவு நவம்பர் 2004 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துக்கள்!

ஜூலை 2004 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :

**சி. மதுமிதா**

6 'C', செயிண்ட் ஜோசப் ஆங்கிலோ இந்தியன் பெண்கள் மேல்நிலைப் பள்ளி

மேலப்புதூர், திருச்சிராப்பள்ளி - 620 001.

**பரிசு பெற்றவை**





"உயிருள்ள நாயுடன் மகிழ்ந்திருக்கும் தளிர்"

"உயிரற்ற பொம்மையுடன் களித்திருக்கும் துளிர்"

## 'நம் இந்தியா?' விடைகள் (பக்கம் 65)

1. வால்மீகி
2. மீராபாய்
3. ஆதி சங்கரர்
4. கௌதம புத்தர்

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 26 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : B. Viswanatha Reddi (Viswam)



# அம்புலிமாமா

(நவம்பர் 2004 இதழ்)

## குழந்தைகளின் சிறப்பிதழ்

இளம் எழுத்தாளர்களையும் கலைஞர்களையும் (வயது-15) சொந்தக் கற்பனையில் உருவான கதைகளையும் ஓவியங்களையும் அனுப்புமாறு அழைக்கிறது.

### கதைகள்

- அதிகபட்சம் மூன்று
- அம்புலிமாமா வெளியிடப்படும் எந்த மொழியிலும் இருக்கலாம்
- 500 வார்த்தைகளுக்கு மேற்படாமல் இருக்க வேண்டு ம்
- பொருத்தமான தலைப்பு தர வேண்டும்
- தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகள் அனைத்து மொழிகளிலான இதழ்களிலும் வெளியாகும்.

### ஓவியங்கள்

- அதிகபட்சம் மூன்று
- குறைந்தபட்ச அளவு 15 x 10 அங்குலங்கள்
- இந்தியப் புராணக் கதைகளில் வரும் நிகழ்ச்சிகளை மையமாகக் கொண்டிருக்க வேண்டும்.
- தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் மையக் கருத்தை விளக்க சென்னைக்கு வரத் தயாராக இருக்க வேண்டும்.
- பயணச் செலவு வழங்கப்படும்.

### பொது

- ஒரு பாஸ்போர்ட் அளவு வண்ணப் புகைப்படம் அனுப்ப வேண் டும்.
- பெயர், வயது (பிறந்த தேதி) வகுப்பு, பள்ளியின் பெயர், பின்கோடோடு கூடிய வீட்டு முகவரி, தொலைபேசி எண், பங்கேற்கும் நிகழ்ச்சி ஆகியவற்றைத் தனியாக ஒரு தாளில் எழுதி கதையுடன்/ஓவியத்துடன் அனுப்பவும்.
- சொந்தக் கற்பனை/சொந்த முயற்சி என்பதற்கு பெற்றோரின் கையொப்பமிட்ட சான்றிதழ் அனுப்ப வேண்டும்.
- உறையின் மீது ''குழந்தைகளின் சிறப்பிதழ்'' என்று மறக்காமல் குறிப்பிடவும்.



கடைசி தேதி: செப்டம்பர் 15, 2004.

சந்தமாமா இந்தியா லிமிடெட்
82, டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல்
சென்னை-600 097.

